சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருமணநல்லூர்ப் பெருமணமென்னும்

# ஆச்சாபுரத் தலபுராணம்.



கொட்டையூர்

சிவக்கொழுந்துதேசிகரியற்றியது.

அஷ்டாவதானம்

பூவை.

கலியாணசுந்தரமுதலியாரவர்கள்

பார்வையிட

பு. அப்பாசாமிமுதலியாராலும்

இ. வேலுமுதலியாராலும்

சென்னை:

மீனாட்சியம்மைகலாநிதி அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

சர்வதாரிஞு.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

## நூலாசிரியர் சிறப்பு.

ஞானதேசி கன்மன்ற னண்ணியசி வன்முத்தர்
மோனமுற் றின்னருளில் மூழ்குவித்த-தானத்
தவச்சரித மோர்பஃது தண்டமிழிற் சொற்றான்
சிவக்கொழுந்து தேசிகனுந் தேர்.

## சோதனாசிரியர் சிறப்பு.

பேச்சோடு மூச்சடக்கிப் பேரின்பந் தந்திட்ட
வாச்சாபு ராணத்தி னாசனைத்து-மோச்சினா
னட்டாவ தானகலி யாணசுந்த ரக்கவிஞன்
மட்டிற்சித் தாந்தமுணர் மன்.

## பதிப்பாசிரியர் சிறப்பு.

சென்னையப்பா சாமிவேள் சீமான்வே லுப்புனிதன்
மன்னுமண நல்லூரின் மான்மியத்தைப்-பன்னுமீ
னாட்சியம்மை சாலையினி லச்சிற் பதிப்பித்துக்
காட்சிபெறத் தந்திட்டார் காண்.

## பிரதிதந்தார் சிறப்பு.

இருக்காஞ்சி யெய்த்திட்ட வெம்பெருமான் வாழுந்
திருக்காஞ்சி சுப்பராயச் செல்வன்–செருக்காஞ்சி
யங்தோறுஞ் சேமிக்கு மற்பகவி யோர்வாடத்
தந்தானேர் நற்பிரதி தான்.

---

இவை
அஷ்டாவதானம்
பூவை.
கலியாணசுந்தரமுதலியாரவர்கள்
மாணாக்கர்
காஞ்சி.
நாகலிங்கமுதலியாரவர்கள்
இயற்றியன.

---

திருச்சிற்றம்பலம்.

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனர்

அருளிச்செய்த

## திருமண நல்லூர்த் தேவாரம்.

பண் - அந்தாளி குறிஞ்சி.



கல்லூர்ப் பெருமணம் வேண்டா கழுமலம்
பல்லூர்ப் பெருமணம் பாட்டுமெய் யாய்த்தில
செல்லூர்ப் பெருமணஞ் சூடலரோ தொண்டர்
நல்லூர்ப் பெருமணமேய நம்பானே. (க)

தருமண லோதஞ்சேர் தண்கடனித்திலம்
பருமண லாக்கொண்டு பாவை நல்லார்கள்
வருமணங்கூட்டி மணஞ்செயு நல்லூர்ப்
பெருமணத்தான்பெண்ணோர்பாகங்கொண்டானே

அன்புறு சிந்தைய ராகி யடியவர்
நன்புறு நல்லூர்ப் பெருமண மேவிநின்
றின்புறு மெந்தை யிணையடி யேத்துவார்
துன்புறு வாரல்லர் தொண்டு செய்வாரே. (ங)

வல்லியந் தோலுடை யார்ப்பது போர்ப்பது
கொல்லியல் வேழத் துரிவிரிகோவண
நல்லியலார் தொழு நல்லூர்ப் பெருமணம்
புல்கிய வாழ்க்கை யெம்புண்ணிய னர்க்கே. (ச)

ஏறுகந் தீரிடுகாட் டெரி யாடிவெண்
ணீறுகந்தீர் நிரையார் விரிதேன் கொன்றை
நாறுகந் தீர் திரு நல்லூர்ப் பெருமணம்
வேறுகந் தீருமை கூறு கந்தீரே. (ரு)

சிட்டப்பட்டார்க் கெளியான் செங்கண் வேட்டுவப்
பட்டங்கட்டுஞ் சென்னியான் பதியாவது
நட்டக் கொட்டாட்டறு நல்லூர்ப் பெருமணத்
திட்டப்பட்டா லொத்திரா லெம்பிரானீரே. (சா)

மேகத்த கண்டனெண் டோளன் வெண்ணீற்றுமை
பாகத்தன் பாய் புலித்தோ லொடுபந்தித்த
நாகத்த நல்லூர்ப் பெருமணத்தா னல்ல
போகத்தன் யோகத்தையே புரிந்தானே. (எ)

தக்கிருந் தீரன்று தாளா லரக்கனை
யுக்கிருந் தொல்க வுயர்வரை கீழிட்டு
நக்கிருந்தீ ரின்று நல்லூர்ப் பெருமணம்
புக்கிருந்தீ ரெமைப் போக்கருளீரே. (அ)

ஏறுந் தண்டாமரை யானுமியல்புடை
மாலுந்தம் மாண்பறிகின் றிலர்மாமறை
நாலுந்தம் பாட்டென்பர் நல்லூர்ப் பெருமணம்
போலுந் தங்கோயில் புரிசடையார்க்கே. (கூ)

ஆகாமன்றொடு சாக்கியர் தாஞ்சொல்லும்
பேதைமை கேட்டுப் பிணக்குறுவீர் வம்மி

ஞதனை நல்லூர்ப் பெருமணமேவிய
வேதனை தாடொழ வீடெளிதாமே. (௰)

நேறும்பொழிற் காழியுண் ஞானசம்பந்தன்
பெறும்பத னல்லூர்ப் பெருமணத்தானை
யுறும்பொருளாற் சொன்னவொண்டமிழ்வல்லார்க்
கறும்பழி பாவ மவல மிலரே. (௰௧)

திருஞான சம்பந்தமூர்த்தி நாயனுர் அருளிச்செய்த

தேவாரப்பதிகம்.

முற்றிற்று.

---

திருச்சிற்றம்பலம்.

சிவமயம்.

# சூசி பத்திரம்.




| அடக்கம். | பக்கம். |
|---|---|
| கடவுள் வாழ்த்து | ,, |
| புராண வரலாறு | ,, |
| நைமிசாரண்யச் சருக்கம் | ௧ |
| தலமகிமைச் சருக்கம் | ௭ |
| தீர்த்தமகிமைச் சருக்கம் | ௧௭ |
| சிவலோக மகிமைச் சருக்கம் | ௨௭ |
| அட்டதீர்த்தச் சருக்கம் | ௪௰ |
| குமாரபூசனைச் சருக்கம் | ௪௫ |
| திருப்பணிபுரிந்த சருக்கம் | ௪௮ |
| காகமுனிச் சருக்கம் | ௫௮ |
| கங்காகூடச் சருக்கம் | ௭௫ |
| ஞானசம்பந்தச் சருக்கம் | ௮௰ |


ஆகச்சருக்கம் - ௰௨.

திருச்சிற்றம்பலம்.

# திருநல்லூர்ப் பெருமணமென்னும் ஆச்சாபுரத் தலபுராணம்.



## காப்பு.

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

பூமேவு பிரமனொடு நாரணனு மகவானும் பொற்பின் மிக்க, தேமேவு மலர்த்தொடையல் வானவரும் பிறருமெதிர் செறிந்து நின்று, நாமேவு துதிபுகல வவரவர்க ணினைத்தவெலாம் நல்கி வாழு, மாமேவு பொழின்மணவை வழித்துணைக்குஞ் சத்தினையாம் வணங்கி வாழ்வாம்.



## கடவுள் வாழ்த்து.



### சத்திவிநாயகர்.

நித்தியப் பொருளா யெங்கு நிறைதரும் சோதியாய்நன், முத்திய தளிக்குந் தூய முன்னவன் மதலை யாகிச், சித்துரு வாகி நல்லூர்ச் சிவலோகந்

தன்னின் மேவுஞ், சந்திவி நாய கன்பொற் ருளி ணை வணக்கஞ் செய்வாம்.

## சிவலோகத்தியாகர்.

நீர்கொண்ட நெடுஞ்சடைமே லிளமதிதண் ணி லவெறிப்ப நிலவு செம்பொன், வார்கொண்ட துணைப்புளக முலைத்திருவெண் ணீற்றுமையாள் வாமத் தோங்க, கூர்கொண்ட படைத்திகிரி மான் முதல்வா னவர்போற்றக் கோதிலாத,சீர்கொண்ட மணவைவளர் சிவலோகத் தியாகர்பதஞ் சென்னி சேர்ப்பாம். (க)

## திருவெண்ணீற்றுமை.

ஆரணியைப் பெருங்கருணை வடிவானை யுலகங்க ளனைத்து மீன்ற, காரணியைச் சிற்பரையை வெற் பரையன் புதல்வியினைக் கடுக்கை யென்னுந், தார ணியை யானனத்தர் சிவலோகத் தியாகரிடந் தன் னில் வாழும், பூரணியை யெழிற்றிருவெண் ணீற் றுமையை யெப்போதும் போற்றி வாழ்வாம். (உ)

## பாதாளவிசர்.

மதகரட வரையினுரி போர்த்துழுவை யதளுடுத்து வானோர் போற்றி, நதிவளர்செஞ் சடையதன்மே னாகமெழி லறுகினொடு நறுந்தா தோங்கு, மிதழிமதி யணிந்துபெரு மணத்தின்வளர் பாதாள

விசர் செம்பொற், பதமலரிற் பணிபவரைப் பணி
குவதென் றனுக்கிசைந்த பணியதாமே. (௩)

## விநாயகக்கடவுள்.

மகரமறி கடலுலகம் புகழ்மணவை மான்மியத்
தை வகுத்துக் கூறத், தகரமலர்க் குழலிடத்தோ
னினைத்தபடி வேதமுனி தன்பால் வந்து, பகரவு
யர் பாரதத்தின் பொருளையொரு கோடுசெங்கை
பற்றிச் செம்பொற், சிகரவட வரையதனி லெழு
தினோன் பதமலரைச் சென்னி சேர்ப்பாம். (௪)

## முருகக்கடவுள்.

ஆயிரத்தின் மீதிருநான் கண்டமினி தாண்டிரு
ந்த வசுரன் றன்னைக், காயிருவேல் கொடுதடிந்
தோங் கமருலகு முயர்மதவெண் களிறு நீடு, வே
யிருதோ ளயிராணி சுகமுமொரு * சதகோடி விள
ங்குஞ் செங்கைத், தூயவன்போற் றிடச்செய்த
தோன் றலெழின் மலரடியைத் துதித்து வாழ்வாம்.

## தட்சணாமூர்த்தி.

கலிவிருத்தம்.

மதியினுயர் சனகாதி மாதவர்க்கா லடியிருந்து,
பதிபசுபா சத்தினறு பாப்பினைத்தன் மலர்க்கை
விர, லுதியநனற் கருணையொடு நுண்ணியதா

* சதகோடி என்றது வயிரப்படையை.

யறிவித்தோன், புதியமலர்த் தாளிரண்டும் போற்றிவணங் கிடுவோமால். (௬)

## சட்டைநாதர்.

*அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.*

புயற்காரின் வருமகவான் பணிவள்ளல் பணிவிடைகள் பொருந்தி நாளுஞ், செயற்காக வெங்கள்குலத் தனையடிமை கொண்டுவளர் தேவ தேவன், அயற்காதி யமலனருள் செய்தபுர மெனவுலக மனைத்துங் கூறும், வயற்காழி நகர்ச்சட்டை நாதனிரு பதமலரை வணங்கி வாழ்வாம். (௭)

## நந்திதேவர்.

*கலித்துறை.*

கங்கை வேணியன் கைலையிற் கதிர்மணிக் கோயிற், றுங்க வாயிலி னின்றுவா னவர்முடித் தொகைமே, லங்கை வேத்திரந் தாக்கிநெ ரிசைக்குறைதகற்று, மெங்க ளையகன் பதமல ரிறைஞ்சுவா மென்றும். (௮)

## நாமகள்.

*அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.*

கறைத்திரு மிடற்றி னனைக் கண்ணுத லுடையகோவை, பிறைச்சடை யவனை நல்லூர்ப் பெரு

மண நம்பன் றன்னே, மறைப்பெரும் பொருளி ஞனே வாழ்த்துசொற் பொருள்க ளல்கு, நறை த்தனி சரோரு கத்தோ ளுமகள் கமலத் தாளே.

## திருஞானசம்பந்தர்.

சோணாடு தனக்கெழிலாம் புகலிதனிற் கவுணி யர்பாற் ரோன்றி நீடு, கோணுக மணித்ருசெஞ் சடைப்பெருமா னருண்மேவிக் குவல யத்துண், மாணுன சைவநெடுஞ் சுடரேற்றிச் சமணிருளின் வலிமை நீக்கி, யாணுன *பெண்ணையுறு பெண்ணு கச் செய்தவர்தா ளகத்துள் வைப்பாம். (ய)

## திருநாவுக்கரசு.

பறிதலைப்பா யுடைக்கொடிய பாதகரா கியகுண் டர் பல்லோர் கூடி, யெறிதிரையார் கலியினிடைச் சிலையினெடு பிணித்திடவு மிலங்கு மேன்மை, நெறிதருமஞ் செழுத்தினைக்கொண் டதுகடந்தோ ன் மலரடியை நினைந்து மன்னும், பிறவியெனப் பகர்ந்திடுநீள் கடலதனைக் கடந்திடுவாம் பெரிது மன்றே. (யக)

## சுந்தரமூர்த்தி

பரவையெழு கொடுங்காள விடத்தையெடுத் துண்டோனைப் பாங்கி னேங்கப், பரவையணி சடை

---

* பெண்ணை என்றது பனைமரத்தை.

யானை நெடியதிரி சூலமெனும் படையி னானைப், பாவையுரு புலவிதனைத் தீர்த்துவரு கெனவிடுத்த பண்பி னானைப், பாவையிரு நாறுதாஞ் தினமன மே யுனக்குறுதி பகர்கின் றேனே. (௰௨)

## மாணிக்கவாசகர்.

செழியனுய ரமைச்சரென விருந்துதிருப் பெருந்துறையிற் சென்று நெற்றி, விழியனிடத் துபதேச மெனுஞானக் கடல்பருகி மேன்மை யாக, மொழியவுறு தமிழ்க்கவிதை மாரிபா சிவமென்று முதுசீர் வெற்பிற், பொழியணிகொ ளுயர்வாத வூர்முகிலை யநுதினமும் போற்று வாமால்.

## தமிழாசிரியர்.

*கலிவிருத்தம்.*

அண்டர்முன் வேண்டவே யம்பு ராசியை
யுண்டவன் செந்தமி ழுகந்த சிந்தையான்
மண்டலம் புகழ்ந்திடு மலய மாதவன்
புண்டரீ கப்பதம் போற்று வாமரோ (௰௪)

கடவுள் வாழ்த்து

முற்றிற்று.

---

# புராண வரலாறு.



அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

அரனுமை யவள்பாற் சொன்ன தன்புறு நந்தி கேட்டு, வரமுறு சனற்கு மாரர்க் கிசைத்திட மகிழ்வுற் றன்னோர், திரமுறும் வியாதர்க் கோதத் திகழுமன் னவர்தாஞ் சூதர்க், கருளொடு மூவா றாக வறைந்திடு புராணந் தன்னுள். (௰௫)

நலனுறு பிரமாண் டத்தி னன்னுகேத் திரகண் டத்துள், மலிதரப் பகர்தல் செய்யு மணவைமான் மியத்தை யிந்த, வுலகின்வா ழீச னன்ப ரெவர்களு முணர நீடு, குலவுசெந் தமிழி னாலே கூறுகேன் விருப்ப முற்றே. (௰௬)

மன்னிய மணவை யென்னும் வளந்தரு சிவ லோகத்திற், பன்னுமான் மியத்தை யன்பிற் படிப்பவர் கேட்போ ரியாரு, மின்னில மதனிற் பன்னா ளின்பமுற் றிருந்து பின்னர், சென்னியின் மதியஞ் சூடுஞ் சிவனடி நீழல் சேர்வார். (௰௭)

## நூற்பயன்.

கொச்சகக்கலிப்பா.

மருவளர்பூங் கொன்றையரன் மணவைநகர்க் கதையினையின், ஒருசிறியேன் காதலினா லுரைப்பேனென் றுரைப்பதுநா, னுருவமுறு கருப்பஞ்

சாற் ரேங்கிரதப் பெருங்கடலைப், பருகவொரு
சிற்றெறும்பு படர்ந்திடுவ தொக்குமால். (யஅ)

## அவையடக்கம்.

கலிநிலைத்துறை.

நாவ லோர்களென் புன்மொழிக் கவிதையை நயக்க
யாவ தாமுறு சூழ்ச்சியென் றெண்ணியிப் புராண
மாவ லாயுதைக் கின்றன னரன்திரு மணவை
மேவு மான்மிய மிசைதலின் விரும்புவ ரெனவே.

## சிறப்புப்பாயிரம்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

தார்மருவு முயர்பொழில்சூழ் மணவைமான் மிய
த்தைத் தமிழதனு லுரைத்தருளென் றிலங்கு கீர்
த்தி,யேர்மருவு திருமூர்பல் லத்தி னோங்கு மெழிற்
சுப்ப ராயன்மகிழ்ந் தியம்பப் பாடிப், பார்பரவு சிவ
லோகத் தியாகர் முன்னம் பகர்தரு*மே ரண்டமா
புரத்தின் வாழுஞ், சீர்மருவு சிவக்கொழுந்து தே
சிகன்ரு னன்கு சிந்தைமகிழ்ந் தினிதினரங் கேற்
றினனே. (உ௰)

புராண வரலாறு
முற்றிற்று.

---

* திருக்கோடீசுவரம் என்னுங் கோட்டையூரா.

திருச்சிற்றம்பலம்.

முதலாவது

# நைமிசாரணியச் சருக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

முன்னநீ டொருகா லத்தின் முதுநகர் காஞ்சி
யுற்ற, வன்னவா கனத்தன் றன்பா லருந்தவ ரெ
ல்லாஞ் சென்று, பொன்னடி வணங்கிப் போற்
றிப் பூவுறை தேவே யாங்கள், மன்னுமா தவஞ்
செய் தற்கோர் மாதலம் பகர்தி யென்றார். (க)

ஓங்கிய தவத்தோர் சொன்ன வுரையிணைந் திலங்கு வேத, னுங்குறு தருப்பை யொன்றை யணி
தரு நேமி யாக்கிப், பாங்குட னதனை முன்னர்ப்
பார்மிசை யுருட்டி நீவி, ரீங்கிது சென்று தங்கு
மிடத்தினி துறைமி னென்றான். (உ)

என்றலு முனிவர் போற்றி யேகிடு நேமியின்
பின், சென்றன ரதுதான் கங்கைத் திருநதி வடபா
ற் சென்று, நின்றதங் கதனை நோக்கி நின்றுநாங்
தவமி யற்றற், கொன்றிய தலமி தாமென் றுளம
கிழ்ந் துறைத லுற்றார். (ங)

மலர்மிசை வைகும் வேதா வரவிடு நேமி சென்
ருங், கிலகிய கார ணத்தா லிசையுமவ் வனத்திற்
கெய்து, நலமிகு நாம நீடு நைமிசா ரணிய மாகு,
நிலவதின் முனிவோர் மெய்ம்மை நெறிதரு தவங்
கள் செய்தார். (ச)

பலவொடு கோங்கு வன்னி பாதிரி செருந்தி
பூக, நில்வுமல் லிகைவான் முல்லை நெடியமா வ
சோகு புன்னை, நலமுறு கதலி தெங்கு நறைமல
ர்ச் செண்ப கங்கார், குலவுமா ஹாரம் வேங்கை
கொன்றையவ் வனங்க ளெங்கும். (ரு)

நிலவுநீற் றொளியான் மன்றை நிகரில்பூ மணை
த்தி னுலே, குலமறை முழக்கா லோங்குங் கொ
ண்டன்மீ தூர்த லாலே, நலனருள் சிவனை மாலை
நான்முகன் றன்னை வானோர், தலைவனை நிகரு
மன்ன தனியெழிற் கான மாதோ. (சா)

பொருவின்மா தவர்கண் முன்னர்ப் புயங்கரா
சிகள்சென் றேங்கு, மிரவின்மா மணியாற் றீப
மேந்திடுங் கவிக ளேகி, மருவிடு கனிகாய் மூலம்
வழங்கிடு மவைக ளன்றிச், சருகுமொண் கனியுங்
காயுந் தருக்களு முதவு மன்றே. (எ)

கலித்துறை.

மடங்க லுஞ்சிறு விழிக்கட மானுமாங் கினிதே,
யிடங்க லந்தரி ஈருந்திடு மிலங்குகே கயமும், பட

ங்கோ ணகமு மெதிரெதிர் நாடிடும் பரிந்து, கொடு
ங்க தப்புலி யுழைகுடிக் திடமுலே கொடுக்கும். ()

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

அன்னதின் யாக சாலே யறைதரு பாக சாலே
நன்னிலே யோக சாலே நான்மறை யோது சாலே
மன்னுமா மகத்தின் சாலே வளந்தரு புராண சாலே
பன்னரீள் சாலே யின்னம் பற்பல கோடி யாமால்.

தஞ்சமின் முனிவர் கூறுஞ் சதுமறை யொலியு
மேலா, மஞ்செழுத் தருவா மீச ஞகம வொலியுங்
காள, நஞ்சணி மிடற்றி ஞனே நலம்பெற வருச்
சித் தேத்தும், விஞ்சிய வொலியுங் கூடி வேலேவா
யொலியின் மேலாம். (௰)

தவத்தினின் மிகுந்த கர்க்கர் ததிசிபா சத்துவாசர்
பவத்தினே வெறுத்த சோமர் பண்புறு வாலகில்லர்
நவத்திரி சடிசு மந்து கர்க்கவி பர்வ நாசர்
சிவத்தினிற் காதல் வைத்த சிகாசடி வாம தேவர்.

தெருளுறு வற்சர் காம சித்துகண் ணுவர்மார்க்
கண்ட, சருளியற் சுமதி சித்த ரன்புறு சுகபாண்
டின, ருருவளர் சம்பு பத்த ருபர்சதா நந்த சாதித்,
திருமறை முனிவர் கூடிச் செழுமக மொன்று
செய்தார். (௰௨)

கலிநிலைத்துறை.

அந்த வேள்வியின் முடிவினி லருந்தவச் சூதர்
சந்த நீடுவெண் ணீறுதன் மேனியிற் றயங்கப்
பந்த நீக்கிடுங் கண்டிகை பகருரங் காது
கந்த ரங்கரஞ் சிரங்கவின் றனர்நனி வந்தார். ()

வந்த சூதனைக் கண்டுமா தவரொலா மகிழ்ந்து
முந்து சென்றெதிர் வணங்கின ரினியசொன் மொ
சந்த நின்மணி யாதன முதவினர்தாமு [ழிந்து
மிந்து சூழுடுத் திரளென வருகினி லிருந்தார். ()

இருந்த மாதவர் சூதரை நோக்கியாங் கினிது, திருந்து சூர்ப்படைச் செய்கையான் சேவடி மலர்கள், பொருந்து நெஞ்சகச் சூதமா முனிவரே புகலு, மருந்த வத்தனிக் குன்றமே யெனப்புகழ்ந் ததன்பின். (௰௫)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

தன்னிடை யடைந்தோர் செய்திடு பாவந் தனைத்தொலைத் திடும்பரி சுளதாய், மன்னிய தருமந் தவஞ்சிறி தியற்றின் மற்றதை மிகவளர்ப் பதுவாய்ச், சென்னியிற் பிறையோ னருளினை யெளிதிற் சேர்ந்திடுந் தகையதாய்ப் புவியிற், பன்னிடு மினிய தலமெது வதனைப் பகர்ந்திட வேண்டுமென் றுரைத்தார். (௰௬)

ஆங்கது வுணர்ந்த குருகயா முனிவ ரந்தணீர் நீவி ரிப் பொழுது, தாங்கருங் காதல் கொடுவினு வுற்ற தலமுள தன்னதின் பெருமை, யோங்கன வூர்தி யனந்தன்மற் றிவர்க்கு முரைப்பதற் கெளியதன் ருகு, மீங்கிவற் றினில்யான் பராசரன் புதல்வ னிடைச்சிறி துணர்ந்தன னெனவே. (௰எ)

உரமிகு மணவைப் பானையும் வெண்ணீற் றுமை யவ டன்னேயும் நினைந்து, பரவச மாகிப் பணிந்தக மகிழ்ந்து பண்புறு முனிவரை நோக்கித், திரமுறு புராண மோன்பதிற் றிரண்டிற் செஞ்சடை யவர் க்குமூன் றேழா, மாவனே யவர்க்கு நான்கிரண் டயனுக் கங்கியா தித்தர்க்கொவ் வொன்ருல். ()

மன்னிய சைவம் பவுடிக மிலிங்க மார்க்கண்டம் வாமனங் காந்தம், தன்னிக ரில்லா வராகமே மச் சந் தகைமைசா லெழிற்பிர மாண்டம், பன்னிடுங் கூர்ம மிவைசிவ புராணம் பண்புறு நாரதம் விண்டு, வன்னிலே யருள்கா ருடத்துடன் பாக வதமிவை மாதவன் புராணம். (௰௯)

வேதநான் முகத்தோன் றனிக்கதை பதுமம் வியனுறு பிரமமே யாகு, *மாதபன் காதை பிரம கை வத்த †மனலியின் காதையாக்கி நேய, மேதகு

* ஆதபன் என்றது சூரியனே.
† அனலி யென்றது அக்கினியை.

மிவற்றிற் சிவபுரா ணத்துன் மேவிய வுயர்பிர மா
ண்டத், தோதணி மருவுங் கேத்திர கண்டத் துரை
த்திடு மங்கர்க் கதைதான். (உ௰)

அக்கதை தலம்பஞ் சாக்கர தீர்த்த மணிதரு
முயர்சிவ லோக, மிக்கசி ரட்ட தீர்த்த மொண்
குமார பூசனை மேவுமாந் தாதா, திக்குறு கீர்த்திக்
காகமா முனிவர் திகழ்கங்கா கூடமெய் யருளைத்,
தக்கவா றன்பர்க் கருள்புரி ஞான சம்பந்த சருக்க
மோன் றென்பான். (உக)

கலிநிலைத்துறை.

அனைய காதையி னத்தலத் தியலுறு மகிமை
தனையு ரைத்திடு வேனது தன்னைநீர் கேண்மி
னெனவு ரைத்தன ரிருந்தவ ரிருந்தவ ரெல்லா
மினிதி னுய்ந்தன மென்றனர் சூதர்தா மிசைப்பார்.

## நைமிசாரணியச் சருக்கம்.

முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - சஉ.

# இரண்டாவது
# தலமகிமைச் சருக்கம்.



அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

நவமலர்மந் தாரமழை பொழிந்திமையோர் மகிழ்வினொடு நாளும் போற்றச், சிவன்மகிழ்வி னொடுமினிது வளர்தெய்வத் தலங்கள்பல செறிந்து மன்னுந், தவமினிய மகம்பரிவிற் புரிதரும தானங்க டழைத்து நீடு, புவிமடந்தை நுதலினிடு திலதமென விளங்குமெழிற் பொன்னி நாட்டின். (க)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

இசைத்திடு சடாயு வலிகொள்சம் பாதி யெனுமிவர் போற்றிடு வேளூர்த், திசைக்கெதிர் வடகீழ்த் திசையினிற் றில்லைச் செழும்பதிக் குரிய தென் கீழ்பான், மிசைப்பிறழ் சோலை மயேந்திரப் பள்ளி வியன்பதிக் கடுத்ததென் மேல்பா, லிசைத்திடுந் தனிச்சீர்த் * திருமுல்லை வாயிற் கணிவடமேற்றிசை யவ்வூர். (உ)

பூவுலகிற் சிவலோகந் திருநல்லூர் மணவைமுத்தி புரமென் றந்த, மாவுரமா லுடனயனிந் திரன்

---

* திருமுல்லைவாயில் என்றது சோணாட்டில் காவிரி வடகரையிலுள்ள திருப்பதியினை.

முதல்வா னவர்நாளும் வணங்கிப் போற்ற, சேவு றுவெல் கொடிப்பரம னினிதுறையு மந்தத்தின் திருப்பே ராகு, மேவுமிந்தப் போதநற்கு வந்தகா ரணமிது விளம்பு வேனல். (ங)

கொச்சகக்கலிப்பா.

தாதளவு மலரிதழிச் சடையவனைப் பணிவதற் குப், போதனுந்தா மோதரனும் புரந்தரனு மூர் திகளு, மாதரொடுந் தேவரொடு மகிழ்ந்து தினம் பொருந்துதலால், பேதமிலவ் வூரவர்கள் பெரும்ப தியென் னலுமாகும். (ச)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஆதியொடு மந்தமிலாச் சோதி யாங்கே யனாதி யாய்ச் சிவலிங்க வடி வமாகிப், பாதிமதி நுதல்வே ற்கட் பவளச் செவ்வாய்ப் பனிமொழிச்சிற் றிடை யுமையா ளிடத்தி லேங்க, வேதனொடு மான்முத லாம் விண்ணுளோரும் விளம்புபிற வுயர்தொ கையும் பணிந்து போற்றக், காதலுட னவரவர்க ளினைத்தவெல்லாங் கருணையுட னளித்தினிது நா ளும் வைகும். (ரு)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

வாமுறு கைலை காசிகா ளத்தி வளர்* திருச் சயி லசி டருணை, யாதன சயிலந் தில்லைமா நகர மானை

---

* திருச்சயிலம் என்றது ஸ்ரீபர்ப்பத மென்பதனை.

க்கா திருமுது குன்றஞ், சிரபுரங் குடந்தை திரு
விடை மருது திகழுயா யூரம்வெண் காடு, *பிரம
மா புரம்வே ளூரினுஞ் சிறந்த பெரும்பதி யாகு
மப் பதியே. (௬)

சிறப்புறு தில்லை யாதியாந் தலங்க டெரிசன மா
தியொவ் வொன்று, லுறத்தனி முத்தி யுதவிடு
மனைய வுயர்சிவ லோகத்தி னிடையே, பிறக்கினு
மதனைக் காண்கினு மதன்றன் பேரினை யுரைக்கினு
மதனி, லிறக்கினு முத்தியளித்திடுந் திறத்தாலெ
வற்றினு முயர்ந்ததே யாகும். (எ)

இனிதருணல்லூர்ப் பெருமண மெனவே யிவ்
வுல கிசைக்குமப் பதிவாழ், மனிதர்க ளெவரும்
வானவர் கணங்கள் மணலெலா முயர்சிவ லிங்கம்,
பனிமலர்த் தருக்கள் யாவையும் விசும்பின் பாத
வம் புனலெலா மோங்கு, புனிதமாங் கங்கை யெ
னத்தகு மிறையோன் பொன்னடி பதித்தநெஞ்
சகத்திர். (அ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

புரந்தரன் சிறையை முன்னர்ப் பொருந்தனி
வயிரவாளி, னரிந்தவண் வருத னோக்கி யடைக்கல
மென்ன வவ்வூர்த், திருந்தரு ளீசன்றன்பாற் செ

---

* பிரமபுர மென்றது சீகாழியை.

ன்றெழில் வரைய னேக, மிருந்திட லெனவி ளங்
கு மெண்ணின்மா ளிகையின் பந்தி. (கூ)

மாமகிழ் மனைக டோறு மலிதுகிற் கொடிகள்
விண்ணிற், சோமனீள் களங்க நீவுந் தூமணி வீதி
யாவுங், காமர்செ யிரதம் பாய்மா கடகளி றோங்கி
நாவாய், நாமமார் திரைசு ருக்க னண்ணின்மா
ளிகையின் பந்தி. (ம)

கழைகறித் திடுகோர் மேதி கடைநெடு வாயி
னின்று, பொழியுநித் திலமு மாதர் புலவியிற் பறி
த்து வீசு, மிழைகளுஞ் சிறுர்கள் சிற்றி லிழைத்
திடு மணியும் வானோர், விழைவொடு சொரியும்
போதும் வீதியிற் குப்பை யாமால். (மக)

செய்தொறும் பணில நல்குஞ் செறிகதிர் முத்த
முஞ்சிர், மெய்தரு மதியின் காந்த வியன்மனை தோ
றும் வில்வே, ளெய்கணை யதனுல் வாடு மின்னு
ளை யிறுகப் புல்லி, மொய்குழன் மகளிர் நல்கு
முத்தமு மிகுதி யாமால். (மஉ)

விண்பயில் மதிய நோக்கி விமலனை நோக்கு மன்
பர், கண்பொழிந் திடுவ தென்னக் கவின்செய்மே
னிலைமா டத்தி, லெண்பயி லிந்து காந்த மெனுஞ்
சிலை சோரியுந் தூய, தண்புனல் பாய்ந்து காவிற்
றருக்களை வளர்க்கு மாதோ. (மங)

விரிந்திடு கமலத் தேனு மென்பொழிற் கனியி னின்று, சொரிந்திடு நறவு மாலைத் தொடக்குறு கரும்பின் சாறும், பரிந்துமே திகள்பொ ழிந்த பாலுமொன் றுகிச் சேல்க, டிருந்திடு கழனி தோ றுஞ் செந்நெலை வளர்க்கு மாலோ. (௰௪)

வனப்புறு தளிர்மென் மாலை வடுப்படி வனநீள் கண்ணிர், தனைச்சொரிந் திடுவ காவே தளர்வன மடந்தை மாதர், தனிக்கொடி யிடையே நீடு தாழ் வன வந்ந லார்வண், டினக்கருங் கூந்த லேமற் றெதிர்பிறழ்ந் திடுவ கண்ணே. (௰௫)

தையலார் கொங்கை தன்னைத் தாழையி னிள நீர் காட்டு, மெய்யது நிறத்தைச் சூதம் விரித்திடு தளிர்கள் காட்டுங், கையினைக் கமலங் காட்டுங் களத்தினைக் கமுகங் காட்டு, மையுலாம் விழிக ளைக்கு வளையினங் காட்டு மாலோ. (௰௬)

மனைதொறு மிரட்டுகின்ற மணமுரா சொலியுங் கொன்றை, புனைபரன் கோயி லன்பர் போற்றிய முழக்குஞ் சோலை, நனைமல ரிசைவண் டார்க்கு நாதமுங் கடலி னோசை, தனையொரு புறத்தே வைத்துத் தனக்குமே லாகி யோங்கும். (௰௭)

கலிவிருத்தம்.

புனிதனடிக் கன்புடைய புண்ணியமா தவத்தி னர்கள், வனைமலர்க்கற் பகநீழல் வானவரு மிமை

யோரா, யீனயதனிப் பேருளை யனவரத நோக்கி டுவா, ரெனிலதன்றன் வனப்பினைவே றெடுத்தி யம்ப வேண்டிடுமே. (௰அ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

அந்தவொண் மணவை தன்னி லந்தணர்க் கினி தி னிந்துஞ், சந்தநீர் படிந்து மீசன் றனையருச் சனைகள் செய்து, முந்தையா கமபு ராண முது மறை யுணர்ந்து மன்பிற், சிந்தையஞ் செழுத்தி னுய்ந்துஞ் சிலர்க்குறு பொழுது போமால். ()

வயனுறு வளமை பார்த்து மலர்ப்பொழிற் பொ லிவு பார்த்துங், கயல்விழிப் பூங்கொம் பன்ன கன்னிய ராடல் பார்த்தும், பயிலுறு பாடல் கேட் டும் பரிவொடு நீதி யாய்ந்து, நயனுறு சிலர்க்கு நாளு நண்ணிய பொழுது போமால். (உ௰)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

நான்முகன் காழி வளம்பதி யதனி னண்ணி விற் றிருந்திடுங் காலை, மான்மழு வெழிற்கைத் தாறுவை யனைய மாநக ரணைந்துமுன் வணங்கி, தேன்மரு மலரா லருச்சனை புரிந்து திறனுறு வரம் பல வேற்று, வான்மலி சோலைக் காழிமா நகர்க்கு மன்னிய வழிக்கொளும் போதில். (உக)

அந்தமா நகரச் சிறப்புமென் சோலை யணியு நின் வயனுறு வளனும், சந்தமார் தீர்த்தப் பெரு

மையு மிறையோன் சந்நிதி மகிமையு நோக்கி, யிந்தவூர் நல்லூ ரெனத்தன தருகே யிசைத்தவா னவருட னிசைத்தான், வந்தகா ரணமிங் கின் னதா லதற்கு மருவுநல் லூரெனு நாமம். (உஉ)

முன்னுறு பிறவி தோறுநல் விரத முடித்துமெ ய்த் தவம்பல குயிற்றிப், பன்னுறு தான மனந்த மந் தணர்க்குப் பலபல வுதவினேர்க் கன்றி, நன் னுதன் மகளிர் பின்னடந் தனங்க னடைபயி லெ ழிற்றிரு நல்லூர், தன்னைவந் தடைந்தங் கொரு நொடிப் போது தரித்திடற் கிசைந்திடா தன்றே.

அன்னிய தலத்திற் சாந்திரா யணநோன் பாற் றிய பேருடன் கங்கை, நன்னதி யாதி தீர்த்தமு னடைந்து நலம்பெற மூழ்கிய பேறு, மன்னிய பரிமா மகத்துறு பேறும் வளர்பொழில் சூழ்ந்திடு நல்லூர், தன்னைவந் தடைந்தோர் கண்டவர் நினைந் தோர் தாம்பெறு பேறெனத் தகுமால். (உச)

அந்தமா நகரந் தனில்வழிச் செல்லு மாற்றி னுல் வாணிபத் திறத்தாற், சந்தமார் புளக வன முலைக் கொடியார் தமைப்புணர் காதலா லேனு, மெந்நீர் மையினுர் தொழில்களா லேனு மிசை த்தொரு நாழிகை யேனும், வந்துநன் கிருப்போ ரதிற்குடி யிருப்போர் வளம்பெறு முத்தர்க ளா வார். (உரு)

தாமரை மலர்மே லாமைகண் படுக்கச் சார்ந்தி சை வண்டுதா ராட்டும், காமர்கொள் வாவி சூழு மந் தலத்திற் காதலிற் புரிமகந். தவங்கள், பூமலி வேணிப் பரன்றனக் குதவும் பொருள்களோன் றனந்தம தாகு, மாமறை யவர்க்குக் கொடுத்திடு தான மன்னியெண் கோடியாய் வளரும். (உசா)

உயர்மணிக் கனக கோபுரச் சிகரத் துற்றிடு துகிற்கொடி யினங்கள், புயலினீ ருடலைக் கிழித்த தின் மழைமேற் பொழிதரச் செய்திடு நல்லூர், வியனுரு மகிமை யறிந்தவர் தங்கள் விளங்கிடு தருமதா னங்க, ளயனக ரடைந்து செய்திடச் சிறிது மகத்தினிற் குறித்திடா ரம்ம. (உஎ)

கிஞ்சுகச் செவ்வாய்ப் பசுங்கிளி யினங்கள் கிளை தருமறைகளா கமங்கள், விஞ்சுபூங் காவிற் பூவை கட் கினிது விளம்புமத் தலத்தனில் வாழுஞ், செஞ்சடைப் பரமன் றனையொரு பொழுது தெரிச னஞ்செய்திடி னன்னோர், பஞ்சபா தகத்த ராயினு மதனைப் பறிகொடுத் தானடி யடைவார். (உஅ)

இளமுலை மகளிர் தண்ணிலா முற்றத் திருந்தெ றிந் தாடுகந் துகத்தைத், தளவலர்ப் பொழில்வாழ்

கவியினம் பிடித்துத் தகையுறு கனியெனக் கறிக்கும், வளனுறு நல்லூர்ப் பரசிவன் றன்னை வணங்கிமெய்த் தோத்திரம் செய்வோர், களமலி களத்த னருளினி லோங்கு கைலைமால் வரையினி லிருப்பார். (உகூ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

சீதநன் மதியஞ் சூடும் சிவன்றிரு மணவை தன்னிற், போதன வூர்தி யென்னப் புகன்றிட்டோ சந்த ணுளர், கோதன மளித்து ளோர்க ளதனவி ழொன்றி னுக்கு, மாதன நாடு தன்னின் வாழ்வர்கள் கோடி காலம். (௩௰)

படிபுகழ் மணவை தன்னிற் பரிவினந் தணர்கட்கிச, னடியவ ராயி னோர்கட் கனிமடஞ் சமைத்துளோர்கள், மடமுறு துகிலொன் றிற்கு மதிமுகமயுத மாகத், தடமுறு சிவலோ கத்திற் சார்ந்தினி திருப்பர் மாதோ. (௩௧)

சோலைசூழ் மணவை தன்னிற் சோதியெம் பெருமான் கோயின், மேலுயர் கோபு ரத்தின் விளங்கிய தீபங் கண்டோர், மாலய னாதி யாய வானவர் கணங்கள் போற்றுங், கோலமார் கைலை தன்னிற் குடியிருந் திடுவ ரென்றும். (௩௨)

பன்னுதன் சோலை நல்லூர்ச் சிவலோகம் பணி
ய வேண்டு, மென்னநன் கொருவ னெண்ணி யே
முடி நடந்த மீளின், மன்னுநற் கங்கை யாடி வந்
தவ னுவ னென்னி, லன்னதன் மகிமை யெம்மா
லளக்கலாந் தகைமைத் தாயோ. (௯௯)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பங்கய மலரைக் கரும்பினை யுழக்கிப் பசுங்கதிர்ச்
செந்நெலைக் கறித்துச், செங்கண்மே திகள்பால்
சொரிந்திட வதனைச் செறிதரு வாளைக ளருந்தும்,
துங்கசீர்ப் பழனஞ் சூழ்ந்திடு மணவைத் தொகு
வள னுணர்ந்தவா றுரைத்தே,மங்கள முறுபஞ் சா
க்கர தீர்த்த மகிமைகூ றுவனினிக் கேண்மின். ()

தலமகிமைச் சருக்கம்

முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - ௭௬.

மூன்றுவது

# தீர்த்தமகிமைச் சருக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

சாற்றுமத் தலத்தி னிற்பஞ் சாக்கர தீர்த்த மெ ன்னப், போற்றிடு தீர்த்த மொன்று புகன்றிடு மஞ் செழுத்தும், வேற்றடங் கரிய கண்ணி விளங் கொரு புறத்தி னுதி, நீற்றணி திகழு மேனி நிம லன்றன் வடிவ மாகும். (க)

புனிதவஞ் செழுத்தி னுண்மைப் பொருளுணர் மேன்மை யோர்க, டனிதரு பிறவி நீங்கிச் சோதி தன் பதத்தைச் சேர்வர், மனவுணர் வினுக்கு மெ ட்டாச் சிவானந்த மயம தாகும், மினியவஞ் செழு த்து மீச னிணையடிக் கன்பு வைத்திர். (உ)

மன்னிய மறைநீ டங்கம் வளர்ந்திடு சிவாகம ங்க, டுன்னிய கலைகள் யாவுஞ் சொல்வதஞ் செழு த்தே யாகு, மின்னவஞ் செழுத்தை நாளு மிதமு றச் செவித்து ளோர்கள், பன்னுமெக் குலத்த ரோ னும் பானடி நீழல் சேர்வார். (ங)

நிலவுமஞ் செழுத்தை யன்பாய் நெஞ்சினி லிரு த்து வோரைக், கலையிளந் திங்கள் கங்கை கடுக்கை வா ளரவு சூடுந், தலைவனென் றுன்னல் வேண்

டுஞ் சாற்றுமிவ் வாறுன் ஞதிவ், வுலகினில் மனித ரென்ன வுன்னில்வெம் பவங்க ளெய்தும். (௪)

பானது படிவ மாகப் பகருமஞ் செழுத்தை நெஞ்சிற், கருதிநன் குணர்ந்தோர் தம்மைக் கருத்திடைக் குறித்து ளோருந், திருகுவெம் பவங்க டீர்வர் திங்கிவர்க் கியற்றி னோர்க, ளருநர கடைந்து வாழ்வ ரறைதரு கற்ப காலம். (௫)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

சிந்தனை மயக்கு மாசையங் கடற்குச் செறிதரு *பரிமுகத் தியா, முந்துறு மினைய வஞ்செழுத் தினையு முறைமையி னன்புற வோதி, யிந்துசேகர னிதமர்ந் துறையு மிலங்குபொற் கோயிலைச் சூழ்ந்து, வந்திடு மினிய வொருவலங் கோடி வலந்தரு பலன்றனை யளிக்கும். (௬)

ஓதிடு மறையி னுபநிட தத்தி லோங்குமுட் பொருளதா யிலங்கு, மாதியு நடுவு மந்தமு மாகி யமர்ந்தினி துறையுமஞ் செழுத்தின், வேதனுங் கரிய மாலுமோ ரெழுத்தின் விரிபொரு ளறிவுறு ரென்னிற், பூதலந் தன்னி லெவாதன் மகிமை புலப்பட விரித்துரைத் திடுவார். (௭)

---

* பரிமுகத்தி யென்பது வடவாமுகாக்கினியை வடவை-குதிரை.

இன்பவீட் டினுக்கு மருவிடுந் துணையா மினைய வஞ் செழுத்தினை மனத்து, ளன்பொடு நினைப் போர் தமக்குவேண் டியதங் களித்துளோ ரவர் தமைக் கண்டோர், மன்பயி லவர்த நீழலிற் பட் டோர் மற்றிவர் தாங்களு நீடு, துன்புறு பிறவிக் கடலினை நீந்திச் சுகந்தரு முத்தியை யடைவார். ()

அன்னவஞ் செழுத்தத் தன்னையிங் கெவரு மறி வதற் கரியதா நுதன்மேல், வன்னிநேத் திரத் தன் புவிதனி லோங்கு வளர்சிவ லோகநா யகன் றுன், றன்னரு ளதனு லாதிகா லத்திற் றனதெ ழிற் செங்கையி னிடத்து, மன்னிய சூலப் படை யினைத் தன்முன் மண்ணிடை நாட்டின னெடு த்தான். (௬)

அத்தலை யிலகு மொருபெரு வாவி யாயிடைக் கண்டதிற் சிரத்தின், வைத்திடு தெய்வ நதிப் புன லதனை மகிழ்வொடு நிறைத்துமற் றதனிற், றத்துவங் கடந்து விளங்குமஞ் செழுத்தைத் தா பனஞ் செய்தன னதனி, லெத்திறத் தவரு மூழ் கியும் பரிசித் தினிதுநோக் கியுநெடி துய்ய. (௰)

உத்தம குரவன் றனையடைந் தவன்பா லோது மஞ் செழுத்துணர்ந் தவருஞ், சுத்தமார் விதியி னுச்சரித் ததனுற் றூயரா வதற்கெளி தன்றெ ன், றத்தனேர் வாவி யமைத்தன னெளிதா யத

ளையன் றமைத்துவைத் ததனு, லித்தலத் தது பஞ் சாக்கர தீர்த்த மெனுந்திரு நாமமெய் தியதால்.

நஞ்சணி மிடற்றோ னடியனா யிகழ்ந்தோர் நடுநிலை பிழைத்திடுந் தீயோர், தஞ்சமி லெளியர்க் கிடரிழைத் திடுவோர் தந்தைதாய் பசித்திடவுண் டோர், வெஞ்சுட ரோரியா னூட்டுவஞ் சகத்தோர் மேதகு கற்பிலாக் கொடிய, பஞ்சபா தகத்த ரோனு மத் தீர்த்தம் படிந்திடின் முத்தரா குவரால். (௰௨)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

ஓதிடுமத் தீர்த்தநேர் தெரிசித்தோ கார் பரிசித்தோ காருவந்து சென்னி, மீதிலொரு திவலையுறத் தெளித்திடுவோர் பருகினோர் மேவு மின்னோர், தீதிலகு மோருகோடி பவந்தொலைப்ப ரதன்கரைமேற் சிரார்த்தஞ் செய்யிற், போதிலுறு பதினுறுண் டது செய்த பலன்பிதூர்க்கள் பொருந்து வாரால். ()

இன்னலறு துலாத்தோடு கார்த்திகைமா சிவைகாசி யெனுமா தத்தி, லன்னநெடுந் தீர்த்தமுவந் தாடினோர் பவங்களெலா மகற்றிப் பின்னும், பன்னிடுமக் கினிட்டோம மொருபதினு யிரமிழைத்த பயனைச் சேர்வர், மன்னுபுகழ் வைகாசி விசாகமதின் மூழ்கிலரன் வடிவ மாவார். (௰௪)

மூந்துறுமத் தீர்த்தமுவந் தாடியதி னெருகுடநீர் முகந்து சென்றங், கந்தநெடுங் கனகவனாச்

சிலையவன்றன் மணிமுடிமீ தாட்டி னோர்கள், பந்த
முறு பவந்தொலைத்துப் பரிமகமா யிரமிழைத்த
பயனைச் சேர்வர், சந்தமுறு பொருள்கொடுத்தாட்
டுவித்தோரு மனையபலன் றன்னைச் சேர்வர். (௰௫)

வெம்மையுறு பவந்தொலைத்து மேலையின்வி
டருள்வதன்றி விளம்புகின்ற, விம்மையினுஞ் சல
ரோகம் வயிற்றுநோய்க் குட்டநோ யெல்லாந் தீர்
க்கும், செம்மையுறு மனமுதவுந் தவமருளு ஞான
மொடு செல்வ நல்குங், கொம்மைவன முலைப்
பாக னமைத்தபஞ்சாக் கரதீர்த்த குணத்தான்
மன்னோ. (௰௬)

நிலவனைய வாவிதனி லன்பினொடு பணிந்துதிரு
நீறு பூசி, யிலகியிடு மக்கமணி வடம்புனைந்தன் னத
ன்கரைமே லினிது வைகிக், குலவுபுக ழஞ்செழு
த்தும் பிரணவத்தி னுடனுவந்து கூற லுற்றோர்,
உலகினிடைப் பெரும்பயனை யிவ்வளவென் றெ
வர்முழுது முரைக்க லாவார். (௰௭)

நேசமொடு புகலனைய தீர்த்தநெடுங் கரைமீது
நிருத்தன் றன்னைப், பூசனையோர் பொழுதவனுக்
குரியநறும் போதுகொடு புரிகுவாரோ, வாசில்பெ
ரும் புகழ்தாங்குங் காசிமுதற் பதிகளினி லன்
பிற் சென்று, வாசமுற்று நெடுங்காலம் பூசித்த
பலனினிது மருவு வாரால். (௰௮)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

கருதுமத் தீர்த்தந் தனிலணைந் தாடிக் கதிய டைந் தவர்கள்யா ரென்னி, லாவுடன் கடுக்கை புனைந்திடு வேணி யண்ணலம் புயமலர்த் தாளின், மருவுமன் புடைய முனிவர்கா ளவர்கள் வரம்பில ராயினு மெடுத்திங், கொருகதை வேதம் வகுத் தவ னருளா லுரைத்திடு வேனது கேண்மின். ()

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

அன்னது பொன்னி நாட்டி லுதப நகரந் தன் னின், மன்னிடு மந்த ணாளன் மாபினி லவத ரித் தோன், முன்னுவே தாந்த னென்ன மொழிந்திடு மொருவ னன்னான், கன்னலஞ் சிலையி னூன்றன் கணையினுக் கிலக்க மானான். (உ௰)

பூசுர மகளி ராதி புலையர்தம் மகளி ரீரும், வாச மென் கூந்தல் வேற்கண் மதிமுக மாத ரார்பா, லா சையுற் றன்பு செய்து மறைந்திடு வலியி னைத் துந், தேசுறு பொருள்க ளிந்துஞ் சேர்ந்துநீ டின்ப மார்வன். (உக)

தந்தைதாய் முதலி னோர்கள் சாற்றிய மாற்றங் கேளான், சந்தவெங் கருத்தன் றன்னூற் றனித்த வர் நெறியி னூடு, வந்திடு வோரை யாங்கு வதைத் துறு பொருள்கைக் கொள்வான், மந்திர மனைத் தும் விட்டான் மந்திர மருந்தல் செய்வான். (உஉ)

விஞ்சிய கிளைஞ ராமேனோர் விளம்புமித் திறமோ ர்ந் தன்ன, வஞ்சகன் றனைமுன் வந்து வளைத்த னர்க் கிவர்க ளோங்கு, வெஞ்சினங் காட்டி யன் னோர் விட்டிட வோடி ன்ன்ற, னெஞ்சினி லச்ச முற்று நிகழுமங் நகரை விட்டான். (உ௩)

பார்வள ரூர்க டோறும் படர்ந்தன னேகி யாங் கும், வாரிளங் கொங்கை வேற்கண் மாதரை நாடி நண்ணு, மார்வநெஞ் சகத்தி னோடு மணைந்தினி தின்ப முற்றும், பேருறு காம மென்னும் பெருங் கட லழுந்தி னனல். (உச)

மற்றொரு மடந்தை மாரன் மணிமுடி யன்ன கொங்கை, விற்றிணி நுதல்வேற் கண்ணாள் மீனவ னூட்டி யுள்ளாள், பொற்றொடிக் கணிகை மாதிற் பொருந்திய போகம் விற்பாள், பற்றிய தமர்கட் கஞ்சிப் பகருமூர் தொறுந்தி ரிந்தாள். (உரு)

அன்னவ டனைமுன் கண்டாங் கவளுடன் கூடி னன்பின், தன்னினுங் கொடிய தூர்த்தர் சிலர்சில தையலார்க, டுன்னிட வவர்களோடு சூழ்ந்துதன் கிளைஞ ராமேனோர், பன்னிடு வசைகட் கஞ்சிப் பதி தொறுந் திரிதல் கண்டான். (உசா)

மற்றவர் தங்க ளோடு மருவின னெவரு மோ ர்பா, லுற்றன ரளவ ளாவி யுகந்துபின் கழைமி தாடுஞ், சிற்றிடை யார்க டம்மைச் சேர்ந்தன

ரொருங்கெல் லோரும், பற்றியே மகிழ்ச்சியோடும் பாடின ராடி னூர்கள். (உஎ)

சந்தத மினைய வாறு தாணியிற் றிரியு நாளின், முந்தைநல் வினை தா னென்று முயன்றிருந் ததனு லோங்கு, மிந்திரை மகிழு நல்லூ ரொழிற்பெரு மணத்தி னேனோ, வந்தன னொருநாள் வெம்மை மருவிய கோடை தன்னில். (உஅ)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பூமலி யுயர்பஞ் சாக்கர தீர்த்தம் புகுந்தினி தா டினு னெதிரே, தேமலர்க் கடுக்கை யணிசிவ லோ கத் தியாகநா யகனையுங் கண்டான், காமர்நீ டினைய பதியினி லந்நாட் கங்குலி லிருந்தன னதன்பின், றூமவார் கவிகூ முலகிலெங் கெங்கு நண்ணினர் முன்னையிற் றிரிந்தார் (உகூ)

முந்துவே தாந்த னென்றிடு மறையோன் மூப் பினை யெய்திமற் றிறந்தான், வெந்திறற் கால தூ துவ ரவனை விளம்பியே நரகினி லழுத்தற், கந்தக னுலகிற் கொடுசெலுங் காலை யணிதரு கைலையங் கிரிவா, ழிந்துசே கானூர் குறிப்புணர் நந்தி யேவ லாற் சென்றனர் கணத்தோர் (௩0)

சென்றிடு வலிய சிவகணத் தோர்கள் செறிதரு கூற்றுவன் றூதர், தின்றிடு பாசம் பிடித்திடு கா ங்கள் சோர்ந்திடச் சினங்கொடு நெடிய, வென்றி

வேன் மழுவா ளெறிந்தன ரவர்கள் மிகவும் மெய்யுள நடுக்குற்று, நின்றன ரவர்கடமையெதிர் நோக்கி நிலவிடு கணத் தவ ருரைப்பார். (௩௰௧)

காலனு லணைந்த தூதரோ யிவன்முன் காசினி புகழ்ந்திடு நல்லூர்ப், பாலுறு முபர்பஞ் சாக்கர தீர்த்தம் படிந்தன னுதலின் மீது, கோலிடும் பவங்க ளனுகிட நரகிற் குறுகிடா னெனவுரைத் தவனை, யேலுறு தெய்வ மடந்தையர் போற்ற வெல்லொளி விமானமீ தேற்றி. (௩௰௨)

பொங்கிய மகிழ்ச்சி யுடன்கொடு சென்று புனிதமார் கயிலையங் கிரியிற், பங்கயன் முதலோர்பணியவீற் றிருந்த பரசிவன் றிருமுனம் விடுத்தார், அங்கவ னிறையோன் மலரடி யிறைஞ்சி யகமகிழ்ந் தேத்தின னின்முன், கங்கைவே ணியன்மற்றவன்றனை நோக்கிக் கருணைகூர்ந் தினிதுரைத் திடுவான். (௩௰௩)

மருமலர்ப் பொழில்சூழ்ந் தோங்குநல் லூரின் மருவுபஞ் சாக்கர தீர்த்தந், தொருதின மூழ்கி யாங்கதன் கரைமேலுறைந்திடு நம்மையு மொருகாற், றெரிசனஞ் செய்து படர்ந்தனை யதனாற் சிறப்புறு கணநிப னாகி, யருமறை புகழுங் கயிலையா மிதனுளமர்ந்திருந் திடுகென வுரைத்தான். (௩௰௪)

இறைவனங் கருளும் வரத்தினா லவனு மிசைந்திடு கணநிப னாகி, யறைதரு தேவர் முனிவர்பா

ரிடங்க ளமர்ந்திடு கயிலைமால் வரைக்க, ணிறைத ருஞ் சோதி பதமலர் நினைந்து நித்திய வாழ்வுபெ ற்றிருந்தான், மறைமுதற் பரமன் கதையமு தரு ந்தி வல்வினைப் பசியகற் றிடுவீர். (௩௫)

மற்றையோர் தாமுந் தரணியிற் பலநாள் மகிழ் வொடு வாழ்ந்திருந் ததற்பின், கற்றைவார் சடை யான் கயிலையங் கிரியிற் கலந்துவீற் றிருந்தனர் வெயிலா, லுற்றிடு கனைநீ டகற்றிமூழ் கினமோ யொளிர்மணிக் கயிலைமால் வரையைப், பெற்றன ரெனிற்பே றெண்ணி மூழ்கிடுவோர் பிறங்குமப் பயன்பெற லரிதோ. (௩௬)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வண்ணமிகு மந்திர்த்தக் கரையிடத்திற் சிலாத ரெழின் மகனார் முன்பு, நண்ணியிருந் தஞ்செழுத் தை விதிப்படியுச் சரித்தபெரு நன்மை யாலே, தண்ணிலவா ரணிசடையா னருண்மருவிக் கணாதி பராந் தகைமை பெற்று, ரெண்ணரிய தபோதனர் கள் சித்திபெற்று ரன்னதையாங் கியல்பினேதை.

சத்திவடி வுறபடையாற் றெட்டதிலே மகிழ் விநொடு தலைமேல் வைகுஞ், சுத்தமுறுங் கங்கை நெடும் புனலதனைப் பூரித்துத் தூய சோதி, நித்த னெழிற் றனதுருவா மஞ்செழுத்தை யதனிடத் து நிறுத்தி வைத்தா, லத்தடத்தின் மகிமையெவ ருரைத்திவோ ரரியதவத் தந்த ணிர்காள். (௩௮)

என்னவினி தோங்குபெருந் தவச்சூத முனிவர் மகிழ்ந் தியம்ப லோடுந், துன்னுமருந் தவர்கள்பஞ் சாக் கரதீர்த்த மகிமைநன்றுய்த் துலங்கச் சொன் னீர், மன்னனைய நகரினுக்குச் சிவலோக மெனும்நா மம் வந்த வாறு, தன்னையுணர்த் திடுகென்றூர் சூத முனி வரனினிது சாற்று கின்றூர். (ருசு)

## தீர்த்தமகிமைச்சருக்கம்

முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - ாரு

நான்காவது

# சிவலோகமகிமைகாட்டிய

## சருக்கம்.



அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

முந்தையி னிராகந் தீர்கற்பந் தனிலே முதும றை நாரதர் தம்மைச், சுந்தர மிருந்த சதற்சனமு னிவர் தொழுதுகார் விடமினி திருக்குங், கந்தரக் கடவுள் பதமல ரிருக்குங் கருத்தனே தவப்பெரு நிதியே, யிந்தவை யகத்திற் பரசிவன் விருப்பா யிருப்பதெத் தலமதை யிசைப்பாய். (க)

இதுதனைக் கேட்கும் விருப்பின னானே னென்றறு நாரத முநிவர், விதுமலி புரிசைத் தில்லைமா நகர்க்கு விளங்குதென் கிழ்த்திசை யிடத்து, மதுமலர்க் கடுக்கை யணிசடைப் பெருமான் மனமகிழ்ந் திருக்குமோர் தலமுன், டதுபுவி யிடத்தி லுயர்சிவ லோக மாமதின் பெருமைக ளனந்தம்.

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

எத்தனை பாவ மேனு மிசைந்தொரு கணத்திற் போக்கு, முத்தம தரும மோவ்வொன் றெவ்வொரு கோடி யாக்கு, நித்தன தருளிற் சேர்க்கு நிகழ்பிணி யுறுது காக்கு, மத்தல மதனின் முத்தி பெற்றவ ரனேக ரம்ம. (௩)

இபம்புமத் தலத்தி லேபஞ் சாக்கர மெனவோர் தீர்த்தம், வயங்கிடு மதனி லொரு முழ்கினும் வைகரேறு, நயந்தரு பன்னி ரண்டு கிரிச்சர நாடிச் செய்த, பயன்றனை யுதவு மோங்கு பருவர லனைத்துந் தீர்க்கும். (௪)

வரியுறு கடுக்கை வேணி வரதனி டருளி னாலே, பரியமா தவத்தி னோர்கட் கதிற்சிவ லோகந் தன்னைத், தெரிவுறக் காட்டி யன்னோர் சிந்தைநன் குவப்பச் செய்தான், விரிகட லுலகந் தன்னுள் விளம்புமத் தலம்போ லின்றால். (௫)

எவ்வகைத் தேவர் தாமு மிலங்கதி லிருப்பர் நீரு, மவ்வள நகரிற் சென்றங் கறையுமா தவங்

கள் செய்தாற், செவ்விதி னுதவு மொல்லை சித்தி யா மதுவே யன்றி, நவ்வியங் கையி னானு நல்லரு ளுதவு மன்றே. (கூ)

அத்தல மதனி லோங்கு மணிதரு சிவலோ கத்தை, யெத்திறத் தவத்தி னோர்கட் கியாதினு லெக்கா லத்தின், முத்தவெண் மூரற் செவ்வாய் முகிண்முலை மலர்மென் கோதை, யுத்தமி பாக னெங்கோ னுகந்தறி வித்தா னென்னில். (எ)

இதுவுமது வேறு.

மருவியமுன் மயேச்சுரகற் பத்திலோது வசிட்டர்பரா சரர்கும்ப சாதர் நீடு, பிருகுமுநி விசுவாமித்திரனற் கேள்வி பெற்றசம தக்கினியத் திரிமுற்றுண்மைத், துருவாச னெனுமுநிவ னாதியாகத் தொகைதருமென் பத்தெண்ணாயிரவர்கூடித், திருகுறுமைம் புலனடக்கி நீறுபூசித் திகழுமக்க மணிவடங்கள் முறையிற் பூண்டு. (அ)

சருகுபுனல் காலருந்தி யஞ்செழுத்துஞ் சதவுருத்திர முஞ்செபித்துத் தயங்கு மத்த, முருகுவிரியிதழ்மதி யரவு கங்கை முடிமிசைவைத் திடுபரமன் றன்னை நோக்கிப், பெருபஞ்சாக் கினிநடுவிற் கோடைதன்னிற் பிறங்குபகற் போதுநின்றுங் கார்காலத்தின், வருமழையி னனைந்துநின்றும் பனிக்காலத்தின் வள்பனியிற் புனலினிடை வருந்தி நின்றும். (கூ)

ஒருபதினு யிரவருடந் தவங்கள் செய்தாருபர்நந் தி முதற்றேவர் குழாமு மேன்மை, தருகுண்டோ தான்சங்கு கன்ன ஞதிச் சாரதரும் புடைசூழத் தேவதேவன், கருநெடுங்கட் பாவையுடன் விடை யின் மீது கருதுமிர சிதவரைமேற் பவள வெற்பு, மாகதக்குன் றமுமெனவந் தெதிரோ நின்ருன் மா தவந்தோர் கண்டிறைஞ்சி வழுத்தினுரால். (௰)

## முநிவர் தோத்திரம்.

கலைபார் கரனே சரணஞ் சரணங் கருணுகரனே சரணஞ் சரணம், மலைவார் சிலையா சரணஞ்சரணம் மலைமா முதலே சரணஞ் சரணம், தலைவா குகவே ள் சனகா சரணஞ் சதுமா மறையின் பொருளே சரணம், மலைமா மகள்பங் குடையாய் சரணம் வா னேர் தலைவா சரணஞ் சரணம். (௰௧)

வானே நிலனே மதியே சரணம் வளியே கன லே மதியே சரணம், கோனே யமுதே குரவா சர ணம் குளிர்மா மதிவே ணியனே சரணம், உளனே யுயிரோ யொளியே சரண மூலவா தவருட் கடலே சரணம், தேனே சுவையே சிவமே சரணஞ் சிவ லோ கபரா பரனே சரணம். (௰௨)

விடமார் களனே சரணஞ் சரணம் விதிமா லறி யா விமலா சரணம், படமா ரரவப் பணியாய் சர ணம் பரனே வரனே பதியே சரணம், வடமா நிழ

ல்வாய் வதிவாய் சரணம் வாலின் விடைமேல் வரு
வாய் சரணம், திடமார் மழுவான் படையாய் சர
ணம் சிவலோ கபரா பரனே சரணம். (௰௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

என்னவுள் ளுருகு மன்பி னேத்தினர் நின்றோர்
வேற்கண், ணன்னமென் னடையாள் பாக னவர்
தமை நோக்கி நீவிர், மன்னுமெம் மிடத்தில் வை
த்த வாஞ்சையி னுலுஞ்செய்த, நன்னர்மா தவத்தி
னுலு நாமினி துவகை யுற்றேம். (௰௪)

வேண்டிய வரங்கள் கேண்மி னென்றனன்
வணங்கி மேன்மை, பூண்டிடு சிவலோ கத்தைப்
புண்ணிய முதலே யாங்கள், காண்டல்செய் திடு
வா னெங்குங் காதலைப் பொருந்த லுற்றோ, மீண்
டது தனைநீ காட்டு கென்றன ரினிய மேலோர்.

அவர்களிவ் வாறு கூற வமலநீர்ப் பொன்னி
நாட்டிற், கவனமின் றெவரும் வாழும் கழிப்பாலை
தனக்குத் தென்பாற், சிவமுறு நல்லூ சென்னுஞ்
செழும்பதி வம்மி னங்கு, நவமுறு சிவலோ கத்
தை நலனுறக் காட்டு வேமால். (௰௬)

சித்தர்கள் முநிவர் வானோர் தினமுமங் கணை
வார் நீடு, மத்தல நமது காத லமர்ந்திடு தலம தா
மென், றுத்தம கணங்க ளோடு மோங்கெழிற் கயி
லை சேர்ந்தான், மெய்த்தவர் மகிழ்வுற் றண்ணல்
விளம்பிய வாறு செல்வார். (௰௭)

வழிநடை மருவு தெய்வ வளம்பதி யனைத்து நண்ணி, வழியுறு நாதனி ஞனை விருப்புடன் வணங்கி நற்றேன், பொழிமலர்ச் சோலை தோறும் பூவைக ளார ணங்கள், மொழிதரு நல்லூ ரென்னு முதுபதி யடைந்தார் மன்னே. (௧௮)

அனையமா தலத்தி னெய்தி யணிகொடஞ் செழுந்தின் றீர்த்தந், தனையடைந் ததனின் மூழ்கித் தனிமணிக் கோயில் சார்ந்து, நனைமலர்க் கடுக்கை வேணி நம்பனை யினிதி னேங்கு, கனகமால் வரைவில் லானைக் கண்டெதி ரிறைஞ்சி னூர்கள். (௧௯)

இதுவுமது வேறு.

அவருமெதிர் பணிந்தெழுமு னதிமதிச் சடைப்பெருமா னருளினீடு, சிவபுரியை நினைந்திடலு மன்னதுபல் கோடிமதி செறிவுற் றோர்பா, னவையறவெண் சுடர்விரிந்து விளங்கிடுவ தெனவாங்கு நண்ணி யந்தத், தவமுனிவரெ திர்தோன்றவெழுந் தபார்த் தனாரணைய தவத்தினோர்கள். (௨௰)

அப்பொழு தினிலிறைவ னந்தரத்தி னெழுந் திருவாக் கதனு லோங்கு, தூயதனிச் சிவலோக மிதுவாகுங் காண்மினெனச் சொல்லி னனங், கேயுமருந் தவத்தினர்கள் மகிழ்ந்தனைய பேருவகை யெனங்கு நீடு, பாயுமலர்த் தடம்பொழிலுந் தமனியத்தா மனத்தடமும் பரிவி னேக்கி. (௨௧)

மன்னுபயோ ததிநிகரா மமுதநிறை யகழ்வளை பொன் மதிளுமேரு, வன்னமணிக் கோபுரமு நவ மணிவீ திகளுமவற் றழகுற் றோங்கு, பொன்ன ணிமண் டபநிறையுஞ் சூளிகையு மாளிகையின் பொலிவு நீடு, துன்னுமா தனமிழைத்து விளங்கி டுவே திகைக்குலமுந் தோன்ற நோக்கி. (௨௨)

கலி நிலைத்துறை.

இசையு நான்முக னிருக்கையு மிலங்குநெட்டாவ
மிசைவி ளங்கிடு நாரணன் பதவியும் விரியெண்
டிசைபு ரந்திடு வோருறை யிடங்களுஞ் சிறந்த
வசையி லாதிமை யோர்பிறர் வாழ்ந்திடு மிடமும்.

பன்னு ருத்திர ருருத்திர மகளிர்க ளுடனே
துன்னி டங்களும்வசுக்கண்மா மருத்துவர் துலங்கு
மின்னிடங்களு நீலலோகி தனுறை யிடமும்
பன்னுமா தித்தர் பனிமதிச் செல்வன்வாழ்பதமும்.

சரியை யாற்றியவ் வுலகினிற் சார்ந்துவாழ் குநர்கள், கிரியை யாற்றியெம் பிரானரு கிருந்திடுங் கேண்மைப், பெரியர் யோகத்தி லிருந்தான் றிரு வுருப் பெற்றோர், ரரிய புண்ணியஞ் செய்பிற ரம ர்ந்திடு மிடமும். (௨௫)

வென்றி மாதவர் கணங்கள்வா ழிடங்களு மேன் மை, துன்று பாரிடத் தலைவர்கள் சூழ்ந்திடு மிட மும், சென்று சென்றுகண் டஞ்சலி குவித்தனர்

செழும்பொற், குன்ற வில்லினுன் றிருமுனங் கூடினர் மாதோ. (உ௬)

அருகு நுண்ணிடை யரம்பையரணிமலர்க் கொடிபோற், பெருகு மன்பொடு விதிப்படி நடித்திடப் பெரிது, சுருதி யாகம மொருபுடைத் துதித்திட வளர்தும், புருவு நாரத முநியுநீள் புனிதயாழிசைக்க. (உ௭)

நலங்கொண் மற்றையாண் டயனமும் பருவமே நண்ணு, வலங்கொண் மாமதி நற்றிதி வாரநாள் யோக, மிலங்கிடுங் கரணங்கண் முந்திராப் பகலி ராசி, துலங்கு நாழிகை முதலிய காலத்தின் றொகையும். (உ௮)

கருது தத்துவம் புவனங்கண் மந்திரங் கலைகள், வருண மொண்பத மென்பவு மன்னுறு வினமும், பொருவில் கோள்களுந் திசைகளும் பூதமோ டைந்து, மருவு பொன்மலை முதலிய வரைகளுங் கடலும். (உ௯)

பாரு டேக்களு மிபக்கரும் பன்னகா திபருந், திகழுங் கின்னரர் தானவர் சாரணர் சித்தர், புகழுங் காருடர் யோகியர் புனிதமா தவத்தோர், தொகையும் வானவர் கணங்களுஞ்சூழ்ந்துமுன்னிறைஞ்ச.

பங்க யாசனக்கடவுளும் பயோததி யதன்மேற், றங்கி வாழ்ந்திடு முகுந்தனுஞ் சார்ந்தரு கொதுங்கிச், செங்கை யான்மணி வாய்புதைத் தன்பொடு

திகழுந், தங்கள் காரியத் துறுகுறை சாற்றினர் நிற்க. (௩௧)

நிலவு மிந்திரன் களாஞ்சிகொண் டொருபுடை நோக், குலவு*பாவக னறைபடு கொழும்புகை யேந்த, வலிய காற்றிறை யாலவட் டம்பணி மாற, வுலைவி லாடிநீ ணிருதிகொண் டுகந்தெதிர் காட்ட.

திங்கதற் றுவா னதிமுதற் றீர்த்தமங்கையர்கள், பாங்கி னுற்றெழிற் கவரிகள் பாங்குட னிரட்டத், தாங்கு மாயிரந் தோளுடை தனிப்பெரு வாணனுங்கொ லிக்குட முழவநீ டொருபுடை முழக்க.

வந்து போற்றிசெய்வானவர் மகுடவான் மணிகள், சிந்த நான்மலர்ச் செங்கைவேத் திரப்படையோச்சி, முந்து நீடுணருக் கிலாவகை யொதுக்கி யெண் முதுசிர், நந்தி யெம்பெரு மான்பெருமகிழ் வொடு நண்ண. (௩௪)

உலகம் யாவையுந் திகழொரு கணத்திடையொழித்து, நிலவு மற்றொரு கணத்திடை யாக்கிடு நெடிய, வலியு டைக்குறட் பூதங்கள் மகிழ்பெரும் பூத, மலகில் கோடிகள் பாடுத லாடுதல் புரிய.

வரங்கள் வேண்டுநர் வேண்டிய தளித்துள மகிழ்ந்து, காங்க ளிரண் டொன்றுடைக் காதலனுடன்கு, ருரங்க லங்கவே லெறிந்தவ னுடனுமையுடனே, யிருங்கதிர்த் தனிநவமண்டபத்திடையே.

---

* பாவக னென்பது அக்கினியை.

அரவ மாமணி கொண்டுநன் கிடையிடை யழுத்திப், பரவு வச்சிரத் தகட்டினிற்பாங்குறச் செய்த, விரவு சிங்கமெல் லணைமிசை மேவிவீற் றிருந்த, கருணை வாரிதிச் சோதியைக் கண்டனர் மாதோ.

கண்டு வீழ்ந் தடி பணிந்தனர் காத லிற்புளகங், கொண்ட மெய்யினோ டெழுந்தனர் குலவுசெந் தழல்வா, யுண்ட வெண்ணெயின் பாவைபோ லுருகியுண் ணின்றார், முண்ட கச்செழுங் கரமலர் குவித்தனர் முடிமேல். (௩௮)

அன்ன காலையிற் சிவபுரி யவர்கட்கு மெதிரோ, முன்ன ரோதுநல் லூரொனு முதுபதி யாகி, மன்ன மால்வரை மகளுடன்மகிழ்வொடு தொல்லை,மின்று மாலயத் திருந்தவா றிருந்தனர் விமலன். (௩௯)

எனையு வந்தவின் றுண்டிடு மிறைவன்வான்மதியம், புனைப ரஞ்சுடர் பூதநா யகனெழிற் புனிதர், வினைய தன்மய மாகிவீற் றிருந்திடக் கண்டா, ரனைய மாதவ ரானந்த வாரியி னழ்ந்தார். (௪0)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

புண்ணிய முதலே போற்றி பூதநாயகனே போற்றி, பண்ணியன் மறைகளேத்தும் பாதபங்கயனே போற்றி, வண்ணவேள் விடையாய் போற்றி வளர்திரு நல்லூர் மேவும், தெண்ணிலா முடியாய் போற்றி சிவலோகத் தியாகா போற்றி. (௪௧)

காமனைக் காய்ந்த நெற்றிக் கண்ணனே போற்றி நீடு, மேமமால் வரையை வில்லா யெழிலுறக் குனித்தாய் போற்றி, மாமனைக் கணையாய்ச் செய்த வள்ளலே போற்றி மன்னுந், தேமலர்ச் சோலை நல்லூர்ச் சிவலோகத் தியாகா போற்றி. (௪௨)

அடியவர் நினைத்த வெல்லா மருள்புரிந் திடுவாய் போற்றி, துடியிடை பாகந் தன்னிற் றுலங்கிடுஞ் சோதி போற்றி, வடிதிரி சூல மேந்து மலர்க்கரத் தண்ணல் போற்றி, கொடியணி மாட நல்லூர்க் குணப்பெருங் கடலே போற்றி. (௪௩)

அராவணி கடவுள் போற்றி மைந்தொழி லினிதி னுற்றும், புராதனப் பொருளே போற்றி புகன்றிடு மதத்தி னெங்கு, கராசல வுரியாய் போற்றி காலனை யுதைத்தாய் போற்றி, தராதலம் புகழும் நல்லூர் தாணுவே போற்றி போற்றி. (௪௪)

என்றுநற் றுதிகள் செய்தே யிலங்குமத் தலத்தின் வைகித், துன்றிடு தத்த நாமந் தோன்றிட வேறு வேறு, வென்றிமார்வத்தி னெங்கிவிளங்கு தீர்த் தங்கள் செய்தாங், கொன்றிய மகிழ்ச்சியோடு முறைந்தனர் சிலநாண் மன்னோ. (௪௫)

ஆங்கதின் பின்னர் நல்லூ ரெனும்பதி யதனி னின்று, நீங்குதற்கிசைந்திடாத நெஞ்சுடனிமைய வல்லி, பாங்குறு பரமன் றன்னைப் பணிந்தனர்

விடைகொண் டேகித், தாங்கண்முன் னினிது
மேவு தபோவன மதனி லுற்றார். (சகூ)

கற்றைவார் சடையி னான்முன் கருதுதன் னடி
யார் மேவப், பெற்றிடுஞ் சிவலோ கத்தைப் போ
ருள தனு லோங்கு, நற்றவர் தமக்குக் காட்டுநாண்
முத லனைய நல்லூ, ருற்றது நாமம் பார்மேலுயர்
சிவலோக மென்றே. (சஎ)

இதுவுமது வேறு.

என்றிசைநாரதமுநிவர் சதற்சனர்தம் மனமகிழ
விசைந்தா ரன்னுர், சென்றனைய பதியினணைந்
தத்தீர்த்தந் தனின்மூழ்கிச் சிவனைப்போற்றி, நின்
றுசில நாளருரிய தவஞ்செய்தா ரதுகண்டு நிமல
னுங்கு, கன்றுகொடு கனியுதிர்த்த விடையினுமை
யுடன்வந்தான் கணங்கள் சூழ. (சஅ)

கண்டுசதற் சனமுநிவர் பணிந்தெழுந்தஞ் சலி
குவித்துக் கமலத் தோறும், விண்டுவுங்காண் பரி
யவனே போற்றிமறைப் பொருள்போற்றி வே
ணிமீது, வண்டுமுரா விதழிமதி யணியாதி போற்
றியென வாழ்த்தி னார, வன்றுகறை கொண்டந
னிக் கண்டனவர் தமைநோக்கி யுரைக்க லுற்றான்.

புவனிதனிற் சிவலோக மிதுவாகு நமக்கெதிரே
பொருந்தி யோங்கு, முவகையில்பஞ் சாக்கரமா
திர்த்தநம தருவமிந்த வூரி லின்னுந், தவமுநிவ

ரனேகர்கள்செய் திடுதீர்த்த மனேகமவை தம்மின் மூழ்கி, நவமுறுதீ வினைநீக்கு மவர்முளட்ட தீர்த் தங்க ளதிக மாமால். (௫௰)

என்றவற்றி னுறுபெயரு மிசைத்திடுமத் தீர்த் தங்க ளினிதா நல்குந், துன்றுபலன் களுமவைக ளுறைந்திடுதா னமுமுறைத்துத் தூயசோதி, யன் றவர்வேண் டியவரமு மகிழ்ந்தளித்தா னவருமிக மகிழ்ச்சி யெய்தி, நன்றிதருமத்தீர்த்தங் களிலாடித் தமதிருக்கை நாடிச் சென்றார். (௫௧)

என்னவுயர் தவச்சூத முனிவரனு தாவினுட னி யம்ப லோடு, மன்னமுனிவர்கண்மகிழ்ந் தத்தீர்த்த மான்மியமு மனுதி யாதி, பன்னுசதற் சனமுனி வர்க் கிசைத்தபடி பகர்கவெனப் பகர நீடு, பொன் னிதழிச் சடைப்பரம னடிமறவாச் சூதமுனி புகல் வதானன். (௫௨)

முனிவர்களுக்குச்

சிவலோகங்காட்டியபச்சருக்கம்

முற்றிற்று.

---

ஆகதிருவிருத்தம் - ௱௬௭.

## ஐந்தாவது

# அட்டதீர்த்தச் சருக்கம்.



அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

சங்கரன்றன் மலரடியைப் பற்றிவளர் கருவாழி தன்னை நீந்திப், பொங்கமின்பக் கரையடைந்த மாதவத்திர் முநிவரர்க்குப் புனித னங்கு, துங்கமுறுஞ் சிவலோகந் தனையறிவித் திடுகாதை சொல்லி னேமற், றங்கவனே திடமெட்ட தீர்த்தமான் மியமுறைப்பே னன்பாய்க் கேண்மின். (க)

அழகுகனிந் தொழுகுமிள முலைத்துவர்வாய்த் தரளநகை யரம்பை மாதர், குழுவினொடு கட்வுளர்கள் புடைசூழ வினிதுவளர் குலிச வேந்தன், மொழியுதவு வனிதையுள மகிழ்ந்திடுநான் முகனிலகு முகுந்த னேத்துஞ், செழுமலர்த்தண் பொழின்மருவு திருநல்லூ ரெனப்புகலுஞ் சிவலோகத்தின். (உ)

அரியதவப் பிருகுமுநி பூருவத்திற் *பூருவத்திலமைத்த தீர்த்தம், விரியுலகம் புகழவிளங் கிடுகின்ற நதின்மூழ்கின் வினைக ளெல்லாம், பிரியுமவர் தமைவிட்டுப் பின்னுமவர் பூதகணம் பிரியா ராகிக்,

* பூருவ மென்பது கீழ்த்திசையை.

கரியதனித் திருமிடறுங் கண்மூன்றும் பெற்றிருப்பர் கயிலைதன்னுள். (௩)

வன்னிவளர் திசையிலங்கி ரசமுநிவ ரினிதமைத்த வளர்மா தீர்த்தந், தன்னிலொரு தாமூழ்கிற் றகையினொடு தாம்பெற்ற தாயைப் பற்றி, மன்னியுறப் புணர்ந்தபவ முதலான பாவமெலாம் பாய்ந்து போகும், பொன்னியலு மெழில்வடிவத் திருமடந்தை யருணோக்கம் பொருந்து மன்னோ.

மாவிரதத் தவமுடைய வசிட்டமுநி தென்றிசைக்கண் மகிழ்ந்து செய்த, வாவிதனின் மூழ்கினவர் பாவமெலாந் தொலைத்துறுசீர் மருவி மேலுங், கோவியலுட் சொற்கமணைந் நாமகளிர் *சொற்கமெனுங் குவடு தன்னில், மேவிநெடுங்காலமின்பப் பெருங்கடலி னிடைமூழ்கி விளங்கு வாரால். (௫)

நிருதிதிசை தனில்விளங்கு மந்திரிதீர்த் தத்தாட னிகழு நெஞ்சிற், கருதியெமும் போதகமுங் கறுவுமொரு தினமூழ்கிற் காணு தோடு, மொருதினம்போன் மூன்று தினமூழ்கிமறை யோர்க்குநிதி யுதவி னோரேற், பொருதிகிரிப் படையுடையா னுலகினிடை நெடுங்காலம் பொருந்தி வாழ்வார். (௬)

வீறுமறை வியாதமுநி தவபலத்தாற் செய்தீர்த்த மேல்பா லோங்குந், தேறுகின்ற வதின்மூழ்

*சொற்கமென்பது மாதர்தநத்தினை.

றிற் பிரமகத்தி முதலியசஞ் சிதபா வங்கள், பாறு
மன் னதின்கரைமேற் ருனமனு வளவு செம்
பொன் பரிந்து செய்யின், கூறுபுகழ் சிவலோகத்
திடைமகிழ்ந்து நெடுங்காலங் குடியாய் வாழ்வார்.

அனிலதிசை வயின்மிருகண் டேனுமுநிவர்புவி
விளங்க வமைத்த தீர்த்தந், தனிலணைந்து மூழ்கி
னவர் பாவமெலாஞ் செனுமிடபத் தகைமைத்
திங்க, ளினிலணுகு பூரணையிற் படிந்துபூ சுரர்க்
குப்பொ னியன்ற திவா, ரெனிலவர்கள் பொன்னு
லகிற் சுரர்களா யினிதிருப்ப ரெண்ணில் காலம்.

வடதிசையி னகத்தியர்செய் திடுந்தீர்த்தந் தனி
லரிய மாதவத்தோர், கடவுளர்க ளமாவாசை தனி
ன்மூழ்க வருவாதிற் கலந்து மூழ்கின், விடலரிய
பாதகம்விட் டேகுமதி லனுதினமு மேவிமூழ்கிற்
றிடமருவு சிவலோகத் தணைந்துகண திபராகிச்
செழித்து வாழ்வார். (கூ)

அருந்தவச மதக்கினிசெய் திடுந்தீர்த்தம் வடகி
ழக்கென் றரையுந் திக்கிற், பொருந்துமதிற் படிந்
தவர்கள் பவங்களெலா மகன்றிடுமப் புனிதவாவி
திருந்துகரை தனின்வதிட்ட முநியமைத்த வில்வ
மொன்று திகழு மாங்கே, யிருந்துசெப தவம்பூ
சை புரிந்தவர்கள் சிவலோகத் திருப்ப ரென்றும்.

மன்னிபவிவ் விருநான்கு தீர்த்தமுறு மான்மி
யத்தை வகுத்தநீடு, முன்னொருநா ளெனக்கல

ரின் மிதிருக்கு மான்மகனு மொழிக வுற்றான்,
பொன்னிதழிச் சடையவனும் திசைமுகனும் மகிழ்
விறெடுபுகழு மேன்மை, தன்னிடமித் தீர்த்தமுறு
மகிமைதனை யெவர்முழுதுஞ் சொல்ல வல்லார்.

கொச்சகக்கலிப்பா.

மாதவர்க ளினிதாங்கு வகுத்திடநா விருதீர்த்த,
மேதகைய காதையினை விளம்பினே னினியங்க,
ணோதமில்சீர் முருகவே ளினிதிணைந்துபரசிவனைக்
காதலுடன் பூசித்த காதையினி புகன்றிடுவேன்.

## அட்டதீர்த்தச் சருக்கம்.

முற்றிற்று.

ஆக திருவிருத்தம் - ௱எகு.

## ஆறாவது

# குமாரபூசனைச் சருக்கம்.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

முன்னொரு பதும கற்பநா ளதிலே முதிர்புகழ்
கயிலைமால் வரைமேன் மன்னுநற் கதிர்சூழ் சந்
திரகாந்த மண்டபமதினிடையிறை யோன்மின்னு
றழ் மருங்குற் செய்பவாய்த் தாளு வெண்ணகை

பனிமொழி மடந்தை, தன்னுட னில்குவச்சிரத் தகட்டிற் சமைத்திடு மடங்கலா தனத்தின். (க)

கனிதருங் கருணை விநாயகன் சண்டன் கதிர்ப் படை நந்திமா காளர், நனிபுகழ் படைத்த வுருத்திரர் முராரி நான்முக னிந்திரன் வசுக்கள், முநிவரர் சித்தர் வயிரவ ரியக்கர் மொழிந்திடு மேனைவானவர்கள், புனிதமா மறைகள் கணநிபர் பணிந்து போற்றிட வுறைந்திடும் போழ்தின். (உ)

சூரன துடலம் பிளந்திட விடுத்த சுடர்மணிக் கூரிலை நெடுவேல், வீரனங் கெதிர்நின் றிறைவனை வணங்கி வெண்பிறைச் செஞ்சடை யவனே காரண மிடற்றுக் கண்ணுத லெந்தாய் கருதுமைந் தொழில்புரி பவனே, யேரன வூர்தி நடுத்தலை யதனை யெடுத்தகைத் தனிப்பரம் பொருளே. (ந)

என்றுநீ டன்பிற் போற்றியிங் குன்னை யின்று நான் மிகுத்தகா தலினு, லொன்றுகேட் பதற்கெ னுளத்திடை குறித்தே னுனைக்கெனி னுரைக்குவனென்ன, நன்றுநீ ருனைக்க வெனக்குகன் றனையும் நன்னுமைங் கானையு நோக்கி, கன்றுமா னேந்துஞ் செங்கையான் புகன்றான் களிப்புட னிருவரு மிருந்தார். (ச)

இருந்தபி னிறைவன் முருகனைப் பார்த்து னிதயத்திற் குறித்ததென் னென்றான், றிருந்துவேற் குமரன் புகலக் கன்னித் சிவபுரந் தனையளிப் பது

வாய்ப், பொருந்திய தீர்த்த மகிமையுள் ளதுவாய்ப் புண்ணியந் தனைவளர்ப் பதுவா, யருந்தவர் வானோர் பணியநீ யென்று மகமகிழ்ந் தினிதிருப் பதுவாய். (ரு)

விளங்கி டுகின்ற தெத்தல மதனை விளம்பிட வேண்டுமென் றுரைத்தான், களங்கணி மிடற்றோ னுவகைகூர்ந் துமையாள் கதிர்மதி முகந்தனைப் பார்த்தான், வளங்கெழு மணிப்பூ ணிளமுலை யுமையு மகிழ்ந்தினி திசைத்திடு கென்றா, ளிளங்கதிர் நிறத்து வேலனை நோக்கி யிறையவ னிசைத்திடு கின்றான். (சா)

காருறு சிகர வரைக்குலம் புடைசூழ் கதிதரு காஞ்சன வுருவ, மேருவின் றென்பாற் பரதகண் டத்தின் விளங்கிய பொன்னிறன் னாட்டிற், சீருறு தோணி புரத்துகோர் வடபாற் சிறக்கின்ற தோரொரு மூதா, ரொருறு மவனி தனிற்சிவ லோக மென்றதற் கிசைந்திடு நாமம். (எ)

நதிகளிற் கங்கை போற்றருக் குலத்து ணவின்றிடு கற்பகா ருவைப்போற், றுதிபெறு தேவர் கணத்துநந் தமைப்போற் சுடர்களிற் றினகரன் றனைப்போற், றிதிபெறு வரைக்குன் மேருவைப் போன்மந் திரங்களி னஞ்செழுத் தினைப்போற், பதிகளி லனைய புகழ்ச்சிவ லோகம் பகர்ந்திடு லதிகமா மன்னே. (அ)

அந்தல நமது மனத்தினுக் கிசைந்த தாகுமா லயன்முதல் வானோர், சித்தர்கண் முநிவோ ரனை வரு நம்மைத் தெரிசனஞ் செய்வதற்காக, நித்த மங் கணைவார் நமக்கெதி ரருகே நிலவொரு தடாக முண் டதுதா, னுத்தம தீர்த்த மாகுமன் னதின் பே ரோதுபஞ் சாக்கர தீர்த்தம். (௯)

என்றதின் பெருமை யாவையு மிசைந்தா னில ங்குமேற் குகன்மகிழ்ந் தோங்கு, குன்றவில் லெ டுத்தோ னடிமலர் பணிந்து கோதிலா வருட்பெ ருங் கடலே, யின்றுநா னணைய பெரும்பதி யதனி லெய்தியவ் வளமெலாங் காண்டற், கென் றனி யுள த்திற் காதன்மிக் கெழுந்த திறற்குநீ யருள்புரி கென்றான். (௰)

நன்றென மகிழ்ந்து நாதனு நீயின் னகரினைப் பார்த்திட வேண்டிற், சென்றிடென் றிசைத்தான் கணாதிபர் சூழத் தேவர்சே னாபதி யெழுந்து, துன்னுசிர் மருவு தோகைமேற் கொண்டு துலங்கு மன் னகரினை யணைந்து, நின்றனன் றீர்த்த முதல வள மெல்லாம் நெடிதுநோக் கினன்மன மகிழ் ந்தான். (௰௧)

ஆலயம் புகுந்து மும்முறை வலஞ்சூழ்ந் தன்பு டன் பணிந்தெழுந் தோங்கு, மாலயன் கடந்தநெ டியமால் வேத னறிந்திடா தனிப்பெருஞ் சுடரை, வேலையி னெழுந்த கார்விட மிலங்கு மிடற்றினன்

றனிப்பெரும் பொருளை, வேலையிற் கருங்கணுமை யொடும் போற்றி மேவுநீ டருச்சனை புரிவான் ()

வானவர் குழாங்கள் மஞ்சனந் தூய் மணமுறு மலர்களின் னடிசில், கானமர் தூப திபங்க ளாதி களிப்பொடு கொணர்ந்தெதி ருதவத், தானவை யனைத்துங் கொண்டுதன் பெருமான் றன்னைமுன் பூசனை யோங்கு, மானமா ரினிய காரணாகமத்தின் வகுத்திடு விதிப்படி புரிந்து. (௰௩)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

ஏர்கொண்ட பெருமறையின் முழுமுதலாய்ச் சிற்பரமா யிலங்கி யோங்கு, நீர்கொண்ட பேரொளியாய்ப் பரவெளியா யுலகெங்கு நிறைந்து நிற்கும், பேர்கொண்ட வுயிர்க்குயிரா யற்புதமா யருள்வடிவாய்ப் பேரா னந்தச், சீர்கொண்ட தனிப் பொருளாய் விளங்குமெழிற் சிவலோகந் தியாக போற்றி. (௰௪)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

எனத்துதித் தின்பக் கடலிடை மூழ்கி யிறை வடீ டருளினை மாதவி, யினப்பெரும் பொழில்சூ ழன்னகர் தனைவிட் டெழுவகற் கிசைவுற் றில ங்கு, மனத்துட னங்கு வீற்றினி திருந்தான் வான வர் கணங்களு மோங்கு, தனிப்பெரும் புயங்க முடி மிசை சுமக்குந் தரணிவாழ் பவர்களும் போற்ற.

மானமா மறைகள் யாவையு முணர்ந்த மாதவத் தந்தணி ரெழிலார், தேனலர் தொடையன் முருகவே ளனைந்துசிவன் றனை யருச்சனை புரிந்த, தானவன் சரிதை யுரைத்தன னினிமே டயோத்தியி னின்றமாந் தாதா, தானவ னடைந்து பரமனைப் பணிந்த சரிதைகூ றுவனது கேண்மின். (யசா)

குமாரபூசனைச் சருக்கம்

முற்றிற்று.

---

ஆக திருவிருத்தம் - ௱கூ௫.

ஏழாவது

மாந்தாதா

# திருப்பணிபுரிந்த சருக்கம்.

கொச்சகக்கலிப்பா.

வானிலகு மதியுரிஞ்சு மணிமதிற்சூ ழயோத்தி தனிற், பானுகுலந் தனிலுதித்தோன் பகைவிலக லினிதுணர்ந்தோன், மானமிகு தனிவேலோன்மாந் தாதா வெனவொருவ, னுனநிற லரசனுலகாண் டிடுநாளி னினொருநாள். (க)

தங்கள்குலக் குருவான வதிட்டமுனி தன்னிடத் திற், றங்கமுத்தி சிவகதைக ளுணர்பொழுதிற்

றெல்புவிமேன், மங்கலமார் சிவலோக மகிமைதனை யுணர்ந்திடலும், பொங்குமன மகிழ்ச்சியுடன் புள கிதமெய் யினனாகி. (உ)

சுத்தமிகு மாதவனைத் தொழுதுசிவன் முண்மற வாச், சித்தமுடை யீர்தமியேன் றிருவளரத் தலத் தேகி, யுத்தமபஞ் சாக்கரத்தி லுவந்தாடி யுமை யொருபா, லத்தனெழிற் பங்கயச்சே வடிபணிந்து வால்வேண்டும். (ங)

இன்னதனக் கருள்புரிக வென்றனனித் திரமு ரைத்த, மன்னனைப்பார்த் தம்முநிவன் மனமகிழ் ந்து பார்த்திபகேள், பன்னிடுமத் தலத்தெய்திப் பரசிவனைப் பணிந்தோர்கண், மன்னுபல னிவள வென மற்றெவர்க ளுரைத்திடுவார். (ச)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

தேவர்க டேவனெங்கள் சிவபரஞ் சோதியாகு, மேவிடும் பணிவி டைக்குண் மேன்மையர்ச் சனை யே யாகு, மாவலிற் சிவலிங் கத்தி னருச்சனை புரிவோர் தாங்கள், பூவினுக் கதிப ராகிப் புனிதவி டெய்து வார்கள். (ரு)

சத்தியோர் பாகன் றன்னைச் சாற்றிடு மனத்தி னோங்கு, பத்தியோ டினிதுபூசை பண்ணுவோர் நான்கி ரட்டிச், சித்திகள் முதல வாகச் சிந்தித்த தெல்லா மெய்தி, முத்தியு மெய்து வார்கள் முடி வினி லென்றும் வேதம். (சு)

ஒருமையின் மாயோன் முன்ன முருத்திரன்
றனைப்பூசித்துத், திருமகட னது மார்பிற் சிறப்
புட னிருக்கைப் பெற்றான், கருதிடு முலக மெல்
லாங் காத்திடுந் தொழிலும் பெற்றான், வெருவுறு
தவுணர் தம்மை வென்றிடு வரமும் பெற்றான். ()

ஆரண னிறையோன் றன்னை யன்புடன் பூசித்
தோது, பாரதி மணமு மெல்லாம் படைத்திடு
திறமும் பெற்றான், போருறு குலிச வேந்தன்
புனிதனைப் பூசித் தேத்தி, யேருறு மிந்தி ராணி
யிளமுலை யின்பம் பெற்றான். (அ)

புனிதனைக் கடுக்கை சூடும் புண்ணியன் றனை
ப்பூசித்துத், தனியெழிற் சோம னன்னாட் சடை
மிசை யிருக்கப் பெற்றான், தினகரக் கடவு ணீடு
திகழொளி வடிவம் பெற்றான், புனைமணி யளகை
வேந்தன் புகலிரு நிதியம் பெற்றான். (௯)

கருமமற் றுளவா னோர்கள் காசினி யிடத்து
மாந்தர், பாவிடு மவுணர் யாரும் பகருமெ காலு மே
ன்மை, மருவிய திறனும் பெற்றார் மதகரி வாசி
யாதிப், பொருள்களுற் றதுவு மீசன் பூசனைப் பய
னேயாகும். (௰)

சத்திய மழகு கீர்த்தி தருமநற கரும மின்பம்,
வித்தைசத் குணத்தியாக மிகுதிறல் பெருமை
யோக, மித்திர மெல்லா மெங்க ளீசனை யிமை

யோர் போற்று, மந்தனைச் சோதி தன்னை யருச்சி யார்க் கெய்தி டாதால். (மக)

ஆதலா லெவரு மன்பா லரனையர்ச் சிக்க வேண்டு, மேதமில் பூசை செய்தற் கெழிற்சிவ லோகம் நன்றும், வேதநீ ரிதயங் கும்பம் வெண்மணல்சத்த லோகம், பூதிமண் ணாதி தன்னிற் பூசனை செயலு மாகும். (மஉ)

ஓதிடு மிதனை யன்றி யோங்குநற் றலங்க ளெய்திக், காதலிற் றீர்த்த மூழ்கிக் கண்ணுத லுடைய மூர்த்தி, பாதபங் கயந்தி னேரோ பணிந்தெழுந் தினிது போற்றி, லாதர வுடன்பூ சித்த வரும் பயன் பெறலு மாகும். (மஙு)

பூசனை யதுவுஞ் செய்து புண்ணியத் தலங்க டோறு, மாசையி னடைந்து நித்த னடிமலர்ப் பணிந்து பன்னாள், வாசமுற் றிருந்த பேறு மருவிடு நல்லூ ரென்னுந், தேசுறு சிவலோ கத்திற் சிவனையோர் பொழுது காணில். (மச)

பரிந்தாற் காலே யத்திற் பகர்திருப் பணிகள் செய்தோர், திருந்துவா கனங்கள் செய்தோர் திருவிழா நடத்தி வைத்தோர், விரிந்தொளி ரணிகள் செய்தோர் விளம்புநற் பரிச னங்கள், பொருந்திடு முதவி செய்தோர் புனிதமார் கயிலை சேர்வார். ()

ஈசனா லயத்தி லாவி னெய்விளக் கேற்றி னோர்கள், தேசுறு கயிலை வாழ்வர் நிகழ்சத கோடி கா

லம், பேசுமெட் டயில மாதி பிறங்கிடு தயிலந் தன்னு, லாசிலா தீபம் வைத்தோ ரவர்களுங் கயிலை சேர்வார். (௰௬)

இன்னவை யனைத்து நல்லூ ரெனுஞ்சிவ லோ கந் தன்னின், பன்னுறப் புரிகு வாரோன் மற்றுமா யிரம டங்கு, பன்னிடு பலன்வந் தெய்தும் பகரு மன் னகரந் தன்னு, ளென்னபுண் ணியங்க டம் மை யியற்றினும் வளரு மன்றே. (௰௭)

வண்டணி மலர்மென் கோதை மாதொரு மரு ங்கு வைக, வண்டுறை வேணி நெற்றி வளர்விழி யிலங்கு நீல, கண்டனெம் பெருமா னீடு கருணை யோ டுறையு நல்லூர், கண்டவர் சிவலோ கத்தைக் காண்பதற் கைய மின்றே. (௰௮)

ஆதலி னினிது நீசென் றனையதோர் நல்லூர் தன்னின், மேதகு தீர்த்த மூழ்கி விமலனைப் பணி ந்து போற்றி, லோதவ னருள்வந் தெய்து முன் றனக் கெளிய தாகி, யீதுசத் தியம தாகு மென்ற னன் விடைகொ டுத்தான். (௰௯)

கொச்சகக்கலிப்பா.

கொடுத்தருளி மாதவன்றன் குலவுதன தாச் சிரமந், தொடுத்தபெருந் தவத்தினர்கள் சூழ்ந்தி டச்சென் றனனுழி, யுடுத்தகரா தலம்புரக்கு மொ ளிர்நெடுவே லரசனகர், தடுத்ததனிக் காதலுட னத்தினமே யெழுந்திடுவான். (௨௰)

முதியதுணை மந்திரியை முன்னழைத்து நீயிரு ந்திடப், பதியிடைநான் வருமளவும் பார்புரத் திடெ னவுரைத்து, நிதியுமள விலகொண்டு நெருங்கு பெருந் தானையொடு, மதியனைய திருமுகத்து மன வியொடு மினிதெழுந்தான். (உக)

பற்பலதூ ரியமுழங்கப் பனிமதியொண் குடை நிழற்ற, விற்புருவக் கொடியிடையார் வெண்கவ ரிக் குலமிரட்ட, பொற்புறுமென் கொடிக்கொடி ஞ்சி புனைமதித்தேர் மிசையேறி, மற்பெருந்தோ ரணமிலங்கு மணிவீதி கடந்தேகி. (உஉ)

முருந்திளவெண் ணகைச்செவ்வாய் முகிழ்முலை தண்மலர்க்கூந்தற், கருந்தடங்கண் மாதர்சிலர் கை தொழுது மீண்டேகத், திருந்திசைப்பா வலர்வீரர் திகழ்கிளையோர் பரிசனத்தோர், பொருந்துமதி யமைச்சர்பலர் போற்றிவிடை கொடுமீள. (உஙு)

நகர்நீங்கி வழிக்கொண்டு நண்ணுமெதிர் நாட் டிடைவாழ், புகர்முகமால் யானையுடைப் புரவலர் கள் வந்திறைஞ்சிப், பகர்தமநாட் டளவும்பின் படர்ந்துவிடை கொண்டேகச், சிகரமலை யும்வன முஞ் செழுநதியும் பலகடந்து. (உச)

சென்றுபுகழ் தில்லைநகர் சிற்றம்பலத்தினிடை, நின்றுநடம் புரிகின்ற நிருமலர்த்தாள் பணிந்தேத் தித், துன்றுபெரு மகிழ்ச்சியுடன் தூபவட கா

வேரி, யென்றுலக மிசைத்திடுகொள் ளிடநதியின் கரையணைந்தான். (௨௫)

கலிநிலைத்துறை.

அந்த நெய்தலொன் றொழித்துள நிலத்தணைந் தாங்கு, சந்த முற்றிடு பொருள்களிற் பலகொடு தலைநாள், பந்த நீக்கிடு மாதவப் பகிரதன் வேண்ட, வந்த கங்கையா மெனவரு வாரியை நோக்கா. ()

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

வரியுறு கொன்றை யாத்தி மந்தம்பொன் கூவி ளம்பா, திரிபெருக் கலரி வன்னி சிறியமான் கன் று வேங்கை, கரியுரி தாங்கி வையங் களிப்புற வருதலாலே, விரிதரு மினிய பொன்னி வெள் ளமீசனேயாகும். (௨௭)

கதிர்மணி துளவு சங்கங் கதையொடு திகிரி வில்வா, ளெதிர்கொணர்ந் திடுதலாலே யில்குமா தவனைப் போலும், வதிதரு மனத்தி றலு மரை மலர் மாலை யாலும், விதியினை நிகருமீண்டு விளங் கிய பொன்னி நீத்தம், (௨௮)

அணிமிக வச்சிரங்கொண் டரம்பைகள் சூழச் செல்லுந், தணிவில்வே கத்தி னாலே சசிமணா ளனையொப் பாகும், பணிபரி மந்தை வள்ளி பக ரும்வே லுடனிங் கேகுந், தணிவிறற் குகனு மென்னத் தோற்றுமிப் பொன்னி நீத்தம். (௨௯)

என்றிவை பலவு மெண்ணி யிலங்கது கடந்து நீடு, தென்றிசைக் கரையிற் சென்று சேர்ந்தன னெதிரோ நல்லூர், வென்றிவெண் மழுவார் செங் கை விமலனுர் மகிழ்பொற் கோமா, னென்றிய கோபு ரங்கண் டுவகையிற் படிமேற் ருழ்ந்தான்.

பொங்கிய காத லோடும் புவியினின் றெழுந்து போற்றி, யங்குநின் றேகுங் காலை யகம்பணை வள னுஞ் சோலை, தங்கிய சிறப்பு நீலத் தடங்கண் வா ணுதலா ராடும், பங்கயத் தடத்தின் சீரும் பார்த்தக மகிழ்ந்து சொல்வான். (௩௧)

பொற்புறு வயலிற் செந்நெற் பொலிபசுங் கதி ர்கள் செவ்வே, நிற்பன சிறுநூல் கற்ருேர் நின் றமை சாற்றல்போலும், முற்பெரு பசுமை மாறி முதிர்ந்திடு கதிர்க டாழ்தல், பற்பல நன்னூ லாய்ந் தோர் பணிகுதல் போலு மன்றோ. (௩௨)

மென்னறுங் கொடியி னேடு விரிதளி ரசையக் காலாற், றுன்னுபூங் கொம்ப ராட றுலங்குகை விரல சைத்து, மன்னிசை நடங்கச் செவ்வி மலர் முகங் காட்டி நின்று, நன்னுதற் கணிகை மாதர் நடனஞ்செய் திடுதல் போலும். (௩௩)

திருந்திய சசைப் போதிற் செறிமது வெல்லா மேவி, யருந்திவண் டினம்பூஞ் சோலை யணைகுத லொருவன் றன்பா, விருந்திடும் பொருள்க ளெல்

லா மினிதுகொண் டவளை விட்டுப், பொருந்திய பொருளி னன்பாற் புகும்பாத் தயனை மானும். ()

மென்னடைப் பெடையி னேடு விற்றினி திருக்கு மன்ன, முன்னுறு செய்ய வாச முளரியம் போது மீது, துன்னியஞ் சூதஞ் செந்தேன் சொரிந்திட லோமத் தியான், மன்றுநெய் வார்த்து நின்று மணமுடித் திடுதல் போலும். (௬௫)

அங்கயற் கண்ணி னர்க ளலைபுனல் குடையுங் காலை, பங்கய முகைகள் மார்பிற் பட்டுநன் னீரு ளாழ்ந, விங்கய துறுதெ திர்ந்தி மெக்குநீர் நிகரோ வென்று, கொங்கைக ளலைக்கத் தோற்றுக் குளிர்புன லொளித்தல் போலும். (௬௬)

அனப்பெடை யினைகொள்வானென் றயல்சிறி தேகி மீண்டு, வனப்புறு சேவல் முற்செவ் வனச த்தின் வதிந்த நோக்குந், தனப்பெருங் கற்பி னர்ந்த சானகி யுரிய காந்தன், மனத்துறு கலக்கந் தீர வளரெரி மூழ்கல் மானும். (௬௭)

மன்றலங் கோதை மாதர் வதனமும் வனசப் போதும், துன்றெழில் வாவி தன்னிற் றுலங்க வேற் றுமையோ ராது, சென்றுசென் றிரண்டி டத்துந் திகழொலிச் சுரும்பி னங்க, ளென்றிநின் றிகலுந் தோற்ற முரியது தேகல் போலும். ()

சந்தமார் வாயிற செந்தா மரைமல ரணிக ளைப் பன்; சந்தமா ரொருவென் கஞ்சங் களிச்சுரும்

போடு வைக, லிந்தமா தலத்தின் மேன்மை யெ ண்ணித்தன் களங்கந் தீர்ப்பான், வந்தமா மதிசெந் தியின் வளர்தவஞ் செய்தல் போலும். (ருகூ)

வளனுறு தீர்த்த மூழ்கிமடந்தையர் கனையி னே றல், தளவவெண் ணகையோர் செல்வி தனைக்கடல் கொடுத்த தெண்ணி, யுளமகிழ் தமரர் போற்றிவ் வூர்தனி லினைய வாவி, யளவிலிந் திரைக டம்மை யருளுதல் போலு மன்றே. (சய)

என்னவோ திவைக ணோக்கி யிவ்வகை யெ ண்ணி யவ்வூர், துன்னிய வேத மாந்தர் துலங் குவீ தியும்வேற் செங்கை, மன்னர்வீ தியுநீள் செல்வ வணிகர்வீ தியும்வே ளாளர், பன்னுவீ திகளு மெங்கும் பார்த்தவ னுவந்து சென்றான். ()

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

தனியெழிற் பஞ்சாக் கரமகா தீர்த்தந் தன்னை முன் னோக்கினன் பணிந்தா, னினிதுமூழ் முறை சூழ்ந் தொண்ணுத லுடனே யியங்கதின் மூழ்கி னன் புகலும், புனிதநீ றணிந்து நியதிகள் முடித் தான் பூசுரர்க் கரும்பொருள் கொடுத்தான், வனி தையோர் பாக னிமையவர் போற்ற மன்னுபொற் கோயிலுட் புகுந்தான். (சஉ)

அன்னுமா னிடத்தோன் றனையெதிர் கண்டான் றணமல ரடியின்வீழ்ந் தெழுந்தான், கள்ளவிழ்

கமலப் போதினைப் பழித்த கைமலர்ச் சென்னி மேற் குவித்தா, னுள்ளுநெக் குருகிப் பரவச மடைந்தா னெண்மலர்க் கண்பொழிந் திடுநீர்,வெ ள்ளத்துட் குளித்தான் புளகமெய் யரும்ப மீள வும் பன்முறை பணிந்தான். (சங)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

சங்கரா போற்றி யன்பர் தமதுநெஞ் சகத்து வந்து, தங்கரா போற்றி மேருத் தனிப்பெருஞ் சிலையாய் போற்றி, பொங்கரா வணிகொ டீரப் புனிதனே போற்றி சூலச், செங்கரா போற்றி நல்லூர்ச் சிவபரஞ் சுடரோ போற்றி. (சச)

சிற்றமிக் கடைந்து வேதச் சிறுவனைக் கவர் வான் வந்த, கூற்றினை யுதைத்த பாதக் குளிர்ச ரோருகத்த போற்றி, யேற்றுவல் கொடியாய் போ ற்றி யிமையவர் கணங்கள் சூழ்ந்து, போற்றிட நல்லூர் மேவும் புனிதனே போற்றி போற்றி. ()

பிறைநுத லிடத்த போற்றி பெருமறை யிட த்த போற்றி, கறையுறு களத்த போற்றி கருது மங் களத்த போற்றி, முறையரிக் கணைய போற்றி முச்சுடர்க் கணைய போற்றி, நறைமலர்ச் சோலை நல்லூர் நம்பனே போற்றி போற்றி. (சசு)

உவமையில் பொருளே போற்றி யொளிர்மழு வாள போற்றி, நவமலர்க் கொன்றை சூடு நாதனே

போற்றி நண்ணும், தவமுனி வோர்கள் கானத்
தாா தலம் போற்று நல்லூர், சிவபுரத் தினிது வை
குந் தேவனே போற்றி போற்றி. (சஎ)

கலிநிலைத்துறை.

என்ன வேற்றிநல் வலம்வந்தாங் கிலங்கெழி
லுமையாள், மன்னு கோயிலுட் புகுந்தமுன் வணா
ங்கினன் றுதித்துப், பன்னு வீதியுட் சென்றெரு
பசும்பொனீண் மாடந், தன்னு ளெய்திவிற் றிருந்
தனன் றாா தலம் போற்ற. (சஅ)

அன்றுபோ லப்பி னடுத்திடுந் தினத்துமக் தீர்
த்தஞ், சென்று மூழ்கியொண் கோயிலிற் புகுந்து
நீள் செம்பொற், குன்ற வில்லியைத் தாணுவைக்
கொன்றைஞ் சூடிறையைக், கன்று மானிடத் தனைப்
பணிந் தான்பணி காலை. (சகூ)

கொச்சகக்கலிப்பா.

மருவலரை முடித்திடுவேன் மன்னவமீண் டினை
யதலத், தொருபொழுதிங் பாஞ்சுடரை யுவந்து
பணிந் தநற்கேகிக், கருதியவை யாவையுமுன்
கைவசமா கிடுமேயென், றிருவிசும்பி னானருளா
லெழுந்ததொரு திருவாக்கு. (ருய)

அவ்வுரைதன் செவிபுகலு மகமகிழ்ச்சி யினி
தடைந்து, நவ்விவளர் காதலத்து நம்பனருட் டிற
ம்போற்றித், திவ்வியவைந் தெழுத்தோதிச் சென்

றுமனை யகம்புக்குந்தான், செவ்வியமா தவவதிட் டன் றிருவடியை நினைந்தேத்தி. (ருக)

காசினிபோற் றினையநகர் கண்ணுதலார்க்கினி தயர்ந்த, பூசனையு மந்திரத்திற் புரியவுறு திருப் பணியும்,பேசுறுநல் விழாவதுவுஞ் செய்விக்க வே ண்டுமென வாசமனை யிடத்தணைந்தான் மனத்தி னிடை குறித்திட்டான். (ருஉ)

அத்திறமே புரிந்திடுவா னரன்வடிவா கமங்களி னிற், சுத்தமுறு காரணத்திற் சொல்லுகின்ற வி திப்படியே, யுத்தமபூ சனைபுரியு முவந்தெனையா ளிறைபேற்கு, நித்தமுமென் றதற்குரிய நிதிக்கு வைகள் பலகொடுத்தான். (ருங)

அன்னதன்பி னிறையவனுக் கணிந்திடுமல் வி கைதளவம், பன்னிவலம் புரியிதழி பாதிரிவண் செருந்திமலர்ப், புன்னையொடு கொகுக்கிற புகன் றிடுசண் பகங்கோங்கு, மன்னெழிற்கூ விளமா தி வளர்பொழில்கள் பலசமைத்தான். (ருச)

நிலவிடுமின் னதன்பின்னர் நெடுந்தனைகளினைப் பிளந்து, சிலைகள்பல கொண்டுவரச் செய்தமைந்த சிற்பிரொனும், கலைபுணர்ந்தோர் தமையழைத்துங் கனகமழையி னைச்சொரிந்து, விலைமிகுபொற் கூடமொடு மேம்படுதானையுமுதவி. (ருரு)

இருவிசும்பு வந்தணையு மிலகுதிருக் கோபுரமு, மருவியசீர் மதில்களுந்தண் வசந்தமணி மண்டப

மும், குருவளர்கா லொருநூறு கொண்டபெரு மண்டபமு, நிருமலனூர் தமக்கிசைந்த நிருத்தநெடு மண்டபமும். (௫௬)

குறக்கொடிபா கனுக்குமொரு கோடுற்குஞ் சாத்தினுக்குந், திறத்திலுய ருமையவட்குந் திரு மகட்கும் பிறர்க்குமுயர், நிறப்பெரும்பொற் கோ யில்களு நிலவுமகா மண்டபமும், சிறப்புறுபஞ் சாக்கரமா தீர்த்தத்தின் படித்துறையும். (௫௭)

கட்டுவித்து மற்றதன்பின் கனகமணித் தோ மைத்து, மட்டுறுபூங் கணைக்கனல்வின் மதிக்கவி கை மான்மகனுக், கிட்டமுறு மிளவேனி லெனும் பருவந் தனின்மகிழ்ந்து, திட்டமொடு கண்ணு தற்குத் திருவிழாச் செயத்தொடுத்தான். (௫௮)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

திருவளர் நல்லூ ருபர்சிவ லோகத் தியாகநா யகனருள் வசந்த, பெருவிழா வினுக்கு வருகெ னத் தெலுங்கம் பிறங்கெழிற் கொங்கணங் கலிங் கம், மருவுசிர் விராட மாரியங் கவுட மாளவங் கேகய மராடங், கருநட மாதி நாட்டினி லுறை யுங் காவலர்க் கோலைமுன் விடுத்தான். (௫௯)

பெரும்பதி யதனை யலங்கரித் திடுவான் பிறங் கொலி முரசறை வித்தாங், கரும்பன முலையா ளி டத்தவன் கோயி லணிசெயச் சிலர்தமை யேவிச்,

சுரும்பணி யிதழி யணிபரன் றனக்குச் சுடர்விடு மாமணி மகுடம், விரும்புவெண் டாள மாலைக ளாதி விளங்கெழிற் கலன்பல கொடுத்தான். ()

• பொன்னிதழ் கடுக்கை வேணியன் கோயில் புகுந்தணி செய்திடு மாந்தர், மன்னிரு நடைகா வணமலர்ப் பந்தர் வாள்விடு நித்தில விதானந், துன்னிடு மகர தோரணங் கதலி தூங்கிடு நவம ணிமாலை, பன்னெடுங் கமுக மோங்குபொற் கொ டிகள் பரப்பின ராலய மெங்கும். (சுக)

முரசறைந் திடலு முவகைமீக் கூர்ந்தம் முதூ நக ருறைந்திடு வோர்கள், வரைசெறிந் திருந்த தெனவொளிர் மாட மாளிகை மண்டப மனைத்தும், முறைசெய்வெண் சுதையிற்புதுக்கின ரிலகு மோ வியந் தீட்டின ரோங்கும், விரைசெறிந் திடும்பூம் பந்தரா திகளால் விளங்குநல் லெழில்பெறச் செய் தான். (சுஉ)

அன்புடன் வீதி யனைத்துநீ டோங்கு மணிந டை காவண மமைத்து, மென்பனி நீரிற் புழுதிக ளடக்கி மீதுநல் விதானங்க ளடக்கி, மின்பயில் கொடிகள் மகரதோ ரணங்கள் விளங்கெழிற் பூர ண கும்பம், மன்பெருங் கமுகு மணிவிளக் கலர்த் தார் வாழைக ணிறைத்தணி வகுத்தார். (சுங)

ஓலமுன் சென்ற தற்றுநற் புகழி னேங்கிய தேசமன் னவர்கள், வேலையி னுயர்ந்த சேனைகள்

சூழ விருப்புட னெழுந்தனர் சென்று, சோலையிற் கிளிக ளாகமம் புகலத் தூலங்குநல் லூரினை யடைந்து, மாலைவெண் கவிகை மன்னர்மன் னவன்றன் மலரடி வணங்கினர் மாதோ. (கஙச)

வணங்கிய மன்னர் தம்முடன் மகிழ்ந்து மருவுபொற் கோயிலி னெய்திப், பணங்குல வுரக கங்கணப் பெருமான் பதாம்புயந் தனைப்பணி வித்து, மணங்கிளர் தொடையற் புரவல ரெவர்க்கும் வசதியுஞ் சிறப்புற வளித்தான், கணங்கொள்வண் டிமிரு மலர்ப்பொழில் புடைசூழ் கடிநக ரயோத்தியர் வேந்தன். (கஙரு)

ஆங்கதன் பின்ன ரிடபவோ ரையினி லருக்கன் வாழ் மதியினின் மதிய, மோங்கிடும் பக்கத் தியல்புனர் பூசந் தொண்மலர்ச் செங்கையிற் சிறுமான் றாங்கிய பெருமான் றிருவிழா வினுக்குத் தரும மால் விடைக்கொடி புகலும், பாங்குட னேத்தி யுயிர்த்தொகை யனைத்தும் பகர்தரு மிகப்பரம் பெறவே. (கஙகூ)

*அச்சுதன் மலரோன் புரந்தர னாதி யறையுமெண் டிசைபுரந் திடுவோர், விச்சையின் மிகுத்த மருத்துவர் வசுக்கள் வெண்மதிக் கடவுளா தித்தர், மெச்சிடற் குரிய வயிரவ ரியக்கர் விளங்குநன்

*விண்டுவை அச்சுதன் என்பது ஆட்டினை அசம் என்றதுபோலும். அச்சுதன்–பிறவாதவன், அசம்–பிறவாதது.

திருவர்விஞ் சையர்கள், கச்செழிற் களப முலைய ரம் பையர்கள் கருணைகூர்ந் திடுமெழு மாதர். ()

சித்தர்கள் முநிவர் யோகிய ரசுரர் திறலுறு பா ரிடத் தலைவர், முத்தன முறுவ ளுகமங் கையர்கள் முந்துகிம் புருடவஞ் சியர்கள், யித்தலத் துறையு மரசர்தங் குழாங்க ளியலுறு மடந்தையர் பிறவு, நித்தனுக் குரிய தொண்டர்க ளெவரு நெருக்குற நின்றுபோற் றிசைப்ப. (கூஅ)

அறசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

குடமுழ வணிகோண் வீணைகொக்கரை தக்கை காளம், படகம்வெண் சங்க மொந்தை பகர்ந்திடு தகுணி கல்ல, வடமு ருலகு தாளம் மத்தளங் குழல்யாழ் பேரி, திடமுறு தடாரி யின்ன திசை தொறு முழக்கஞ் செய்ய. (கூகூ)

நலனருள் பரமன் வந்தான் நம்பினோர்க் கன் பன் வந்தான், உலகினுக் கிறைவன் வந்தானுயி ர்க்குயி ரானோன் வந்தான், சிலைநுத லிடத்தோன் வந்தான் சிவலோகத் தியாகன் வந்தா, னிலகு மால் விடையான் வந்தா னென்றுசின் னங்க ளா ர்ப்ப. (எ0)

சாரியை முறையி னோடு தளிரடி பெயர்த்தாக் காத்த, ளோரியன் மலர்மென் கைக ளிலங்கிடப் பாப்பி மன்னும், கூரிய னெடுவேற் கண்கள் குல்

வுமவ் வழிபு ரட்டிக், காரியற் கோதை மாதர் களி
ப்பொடு நடனஞ் செய்ய. (எக)

குல்விய மதார வேழக் கொடுஞ்சிலை யதனி
லாரூ, யிலகு தாள் வரிகடம்மை யிசைந்துநா ணாக
வேற்றி, யலைகடன் முரச மார்ப்ப வனங்கனூர் நடு
வி னின்று, மலர்மணக் கோலஞ் செய்யும் வசந்
தன்முன் வணங்கி நிப்ப. (எஉ)

தவள வெண்குடை நிழற்றத் தமனியக் குடை
கள் மின்ன, விரவிய தொங்கல் சூழ விருதுகிற்
கொடிக ளாட, வருகுவெண் கவரி கைக்கொண் ட
ருகுமின் னிடையார் வீசப், பாவிடு தூப மல்கப்
டிற்பல தீப மோங்க. (எங)

தந்திமா முகத்தன் வேலோன் சயிலவெண்
கயிலை காப்போன், முந்தினி தேகப் பின்னர் மு
துபுகழ்த் தண்டித் தேவன், வந்திட வுண்மயுந்
தானு மகிழ்ந்தெழின் மருகி னூடு, சந்திமண் டல
மாந் தன்னிற் றனிப்பெரும் பவனி போந்தான்.

அடுத்தநாண் முதலா யோங்கு மாதித்த மண்ட
லஞ்சீர், தொடுத்திடு சிவிகை பூதம் துலங்குமா
விடபங் கயிலை, தடத்தனி யானை வாசி தமனியத்
திருத்தே ரென்னத், திடத்துவா கனங்க ளேறிச்
செழித்திடு பவனிவந்து. (எரு)

திருந்திய விசாக நாளிற் சிறப்புட னணைந்தோ
ர்க் கெல்லாம், பொருந்துபஞ் சாக்க ரத்தின் புண்

னிய தீர்த்த நல்கி, யிருந்தனித் தாவசம் பின்ன
ரிரக்கின ருங்க வன்பால், வரங்கள்பெற்றெவருந்
தங்கள் வளம்பதி யடைந்தார் மன்னே. (எசு)

மற்றதன் பின்னர் நீடு மணிமதி லயோத்தி
வேந்தன், கொற்றவ ரியாவர் கட்குங் குலவிய
வரிசைநல்கிப், யத்தலமிவர்க டம்மை யவரவர் பதி
கட் கேவிப், பொற்றொடி மாதுந் தானும் புனித
பொற் கோயில் புக்கான். (எஎ)

சென்றுமும் முறைசூழ்ந் தீசன் றிருவடிப் போ
து கண்டு, துன்றிய மகிழ்ச்சி யோடுந் தொழுதெ
ழுந் தங்கை சென்னி, யொன்றிடக் குவித்து நெ
ஞ்ச முருகிட விழிநீர் சோர, நின்றுதன் னூர்க்
குச் செல்லு நினைவினன் றுதித்தல் செய்வான்.

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

ஞானித்த மோதுனது பாதத்தி யானமுறு ஞா
னத்தி னிட வருள்வாய், மானப்ப யோததியின்
வீதுற்று வாழுநெடு மாலுக்கும் வாணி யுடனே,
தேனுற்ற தாமரையின் மேவிக் குலாவுமொரு தே
வர்க்கு நாட வரியாய், பானற் கிரீவசிவ லோகத்
தியாகவுமை பாகத்து வேத முதலே. (எஅ)

அரவாறு மாமதிய நறையூறு தாரிகழி யணி
யாக மேவு சடையாம், அரவாம தேவசிவ பரகால
காலவுப ரமகார்நல் லூரி லுறைவே, யுரவீர சூல

தர வளர்பூத நாதநிதி யொளிமேரு வில்லழகனே,
யுவைவாய்மெய் யாலினிதி னுனைநாளு நான்மகிழ்வி
னுடனேநீதி வாழ வருளே. (அய)

கலிவிருத்தம்.

என்னமுன் போற்றிசெய் யிமைய வல்லிதன்
மன்னவன் றன்னிடை வரங்கள் பெற்றுநீ
டன்னவொண் பதியினின் றயோத்தி மேவினன்
றுன்னிய படைக்கலஞ் சூழ்ந்தி லங்கவே. (அக)

மேயவப் பதியிடை விற்றி ருந்துநீ
டாயிரம் பனுடவி யாவந் தாங்கிய
மாயிரும் புவியெலா மகிழ்ந்து காத்தன
னேயுநற் புகழுற விசைந்து பல்பகல் (அஉ)

இவ்வகை யன்னக ரிருந்த வேந்தர்கோன்
செவ்விதிற் பலபகல் சென்ற பின்னொரு
நவ்வியங் கையினு னளின நான்மலர்த்
திவ்விய வடிநிழல் சேர்வுற் றனரோ. (அந)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

அன்னதன் பின்ன ருள்ள வரசரும் வருடந்
தோறும், பன்னுமவ் வாறு நீடு பரிவுளத் தெய்தி
யன்ன, சென்னியாற் றினற்குநல்கு திருவிழா
நடாத்த லுற்றார், மன்னுமுக் குற்றந் தீர்ந்து மா
தவ மியற்று வீர்காள். (அச)

இரவிதன் மரபிற் றோன்றி யிலகுமாந் தாதா வென்றும், புரவலன் காதையிங்கு புகன்றன னிவிரீ டோங்கு, வரமுறு தவத்துக் காக மாமுனி யினிதி னேகி, யரனடி யடைந்த காதை யறை குவ னீவிர் கேண்மின். (அரு)

மாந்தாதா
திருப்பணிபுரிந்தசருக்கம்
முற்றிற்று.

---

ஆக விருத்தம் - உஅ௰.

## எட்டாவது
# காகமுனிச்சருக்கம்.

---

அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

புனிதமுறு மாதவத்திர் காகமுனி யெனவொரு வர் புகலு மன்னர், பனிதருவெண் மதிபுனையு மெ ழிற்சடையோ னடிபரவும் பான்மை யுள்ளா, ரினி மையுறுந் தனிமைபெறு நிராசையினர் தவம்புரிவா னிமையச் சாரல், தனிலிருந்து சென்றனரிவ் வுலகை மெலாம் புகழ்நாசித் தலத்தி னுற்றார். (க)

புடவிமிசை வயிரவனுன் மகிழுமிட னாகியண் டப் புருட னென்றும், கடவுடனக் கிருபுருவ நடு

வாகி விளங்குமெழிற் காசி தன்னிற், றிடமருவு பகிரதன்முன் னரியதவம் நெடுங்காலஞ் செய்தல் கண்டு, தடமருவு மனனெடித்து வந்துவந்த கங்கை நதி தன்பால் வைகி. (௨)

பெருகாலந் தானருந்தி வானவருக் கமுதளித்த பிரானை யுன்னி, யொருகாலி னின்றுபதி னயிரமி யாண் டியைந்தபுன லுண்டு நீத்தும், வருகாலுண் டுறுதலைகி யூக்கிநின்று மொருகாங்கால் மண்ணி லூன்றிச், சருகால்வெம் பசிதணித்துத் தனித்த னியத் துணைவருடந் தவங்கள் செய்தார். (௩)

மாதவமிவ் வாறுபுரிந் திடுமுறுதி தனைநோக்கி வார்ச டைக்கண், மாதவமன் னிதழியணி யாதி விடை மிசையேறி வரையிற் றேன்று, மாதவணி மதியெனவே முகமிலங்கப் புடைவிளங்க வந்தா னேங்கு, மாதவனு ரணன்மகவான் முதலியவா னவர்கணங்கள் வணங்கிப் போற்ற. (௪)

வந்தனமா முனிவரெதிர் விசும்பிடைநின் றுன வர்தா மகிழா நின்று, வந்தனமா னதுசெய்தேத் தினராதி நீர்செய்த தவத்தி னாலும், வந்தனமா லின்றுமக்கு வேண்டுவர மென்கொலது வாய்க்க் கல்க, வந்தனமாந் தவநமக்கென் றியற்றினீர் வின வுகென வாய்ம லர்ந்தான். (௫)

வலனுறுவாட் கணிச்சிபுனை பாணிவ்வா றுரைத் திடலு மாத வத்தின், பலனுறநின் றிடுமுநிவர்

தமியனே னினியனுகும் பவங்க ளொன்று, மில
னெனப்பே ரானந்த மினிதடைந்து னின்பதங்க
ளென்னக் கூறு, நலனுறுதன் னன்னயலர் நிழலி
லுறைந் திடுகவா நல்கு கென்றார். (சு)

மங்கையிடத் தவன்பொன்னி நாட்டிலுறை சிவ
லோக மகிழ்ச்சி யாகி, யங்கையுறு கனியெனவே
முத்திதனைத் தன்னிடத்தி லணைந்த வர்க்குச், சங்
கையின்றி யுதவுமன்ன தலத்தேகு மினையபற் று
னேயிந்தக், கங்கையினிற் படிந்தெனவே மொழிந்
தகன்றான் கடவுளர்தங் கணங்க ளோடும். (எ)

மறைமுதலா கியவுணர்ந்த முனிவரர்விம் மிர
ராகி வாரணாசி, நிறைபுனற்பா கிரதியின் மூழ்கி
னாஞ் செழுந்ஜோதி நிலவு காளக், கறைமிடற்
றன் திருவிளையாட் டெவரறிவா ரவனருளாற் கா
லந் தன்னி, லிறைபெனும்போ தினிலனைய சிவ
லோக நகரினிடை யெழுந்தா ரன்றே. (அ)

எழுந்துபார்த் திடுங்காலை யப்பதியிற் சராசர
ங்களெல்லாந் திங்கட், கொழுந்துபுனை பானுரு
வாய்த் தோன்றிடலும் மனமகிழ்ச்சி கொண்டு
மண்மே, லெழுந்துறக்கால் வைப்பதனுக் கச்சமு
ஞ்கொண் டான்கோயி லணைவான் பின்னும், செழு
ந்தலையா னடைந்தனைய சிவபெருமான் றன்னரு
ளாற் றிருமுன் னின்று. (கூ)

சலந்தரன துடல்பிளந்த திகிரிதனை யரிக்களித்த தலைவ போற்றி, வலந்தருவிற் கரும்பனைநீள் வன்னியாக் கியனுதற்கண் மணியே போற்றி, சிலந்திதனை வளவனெனத் தோற்றுவித்தாட் கொண்ட பெருந் தேவே போற்றி, நலந்தருபா ருலகொடு விண் ணுலகையுமோ ரொலிக்களித்த நம்ப போற்றி

பனைத்துதிக்கை மலையுரித்த வீசதிரி புரமெரித்த பரனே காவென், றனைத்துதிசெய் திடற்கரியா தித்துணைக்கா லமுமுலக மெங்கு மேவி, யெனைத்துடலுந் தனித்தனியங் கெடுத்தவற்றி லார்ச்சிதஞ்செய் திருந்த வென்றன், வினைத்துயரின் றொடக்கறுத்தின் றெனையடிமை கொண்டருளும் விமல போற்றி. (யிக)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

என்று நற்றுதி செய்தன சவர்கேட்ப விறையவ னிருதிதன் றிசையிற், சென்றிடுஞ் சிலநாள் வந்திடு மிடபத் திங்களின் ஞானசம் பந்தன், வென்றிமா தவத்தோர் குழாத்தொடு மீண்டு மேவிநன் மணஞ்செயு மனைய, மன்றலி னுமக்கு முத்தியா மென்ன வானுறு வாணியா லுரைத்தான்.

கொவ்வையங் கனிவாய் பாகனிவ் வாறு கூறிய துணர்ந்ததி சயித்தாங், கவ்வகை நிருதி திசையினின் மேவி யருந்தனி யோர்கத்த ராகிச், செவ்விதினிருக்குங் காலையங் கெதிரோர் சிவனுருக் கன்

டூ சித்தா, ரிவ்வகை யுலகம் புரந்திடும் வளவ னினிதுறிந் தன்னக ரடைந்தான். (௰௩)

புரந்தர ருதி யமரரும் பிறரும் போற் றிவரம ளித் தகந்தாங், கிருந்தி டுஞ்சிவ லோகத்தி யா கேச னிணைமல ரடிபணிந் தேத்தித், திருந்திய தவத்து முநிவராச் சிரமஞ் சென்றடி வணங்கின னவர்தாம், பொருந்திட வாசி புகன்றுமுன் னணை யப் புலிக்கொடிப் புரவலர் பார்த்து. (௰௪)

இளம்பனிக் கதிரு மரவமும் புனையு மீசனைப் பூசனை யுலகின், வளம்பெற வியற்ற வேண்டு மென் றுளத்தின் மதித்தன னதற்குமுன் னீண்டு, விளங்கிடத் தோன்றி யிருந்தன னிறையோன் விளங்குபூங் கோயிலொன் றுயர்நூல், கிளந்தவ ரிபற்ற வேண்டுமே லென்னக் கிளத்தினர் புரவ லன் புகல்வான். (௰௫)

தனிபனே னதற்கு வேண்டிய நிதியுந் தகுதி யா னதுசெயற் குரிய, மனிதரு மிறையோன் பூச னை மேன்மேல் வைகலும் நடந்திடும் பொருட்டு, நனிவினை நிலனும் பிறவுமிப் பொழுதே நல்கியிங் குப்வதற் கடிக, னினிதருள் புரிக வேண்டுமென் றிரந்தா னிசையுறு முநிவரு மிசைந்தார். (௰௬)

விளையுறு மலர்த்தா தலித்தொடை நிருபன் வி ளம்பிய படிமகிழ்ந் தளித்தான், வளைநெடுஞ் சிலை யான் சினகரந் தானும் வளம்பெறச் செய்தனர்

செய்வோர், கரையின்மா தவத்தன் கடலனார் வே
ந்தன் கதிர்மதி முகந்தனை நோக்கித், திரையுலாங்
கடல்சூழ் மேதினி புரக்குந் திறனுறு மன்னவ
கேண்மோ. (யஎ)

அந்தமா மதிசூ டிந்துயோ கிசர்க் காலயத் திரு
ப்பணி சமைத்தோர், சந்தமார் நிதிகள் விளைநிலங்
கொடுத்தோர் தருமலர் காவித மமைத்தோர், வந்
தனை புரிவோ ரருச்சனை செய்தோர் வளனுறச் செ
ய்வித்தோ ரெவரும், பந்தமா சகற்றிச் சிவபர னு
லகிற் பரிந்துவீற் றிருப்பரெந் நாளும். (யஅ)

என்னமுன் னுரைத்துப் பின்னருஞ் சிறப்பி
னிசைத்திடு மாசிக ளிசைத்து, நின்னக ரினுக்கு
நீயணை கென்று நிகழ்த்தினர் நிலவுவெண் கவி
கைச், சென்னியம் முநிவ ரிணைமல ரடியைச் செ
ன்னியால் வணங்கிநின் றேத்தித், தன்னக ரடை
ந்து வீற்றினி திருந்தான் றன்பெருஞ் சேனைக
ளுடனே. (யசு)

கருதருந் தவத்துக் காகமா முநிவர் கதிர்தரு
செஞ்சடா டவிமே, லிருநதி யடையு மீசனைப் பூ
சித் திருந்திய விடபமா மதியின், மருவெழிற்
காழி ஞானசம் பந்தர் மணப்புரி தினந்தனில் வி
ளங்கு, மொருதனிச் சோதி யிடத்தினிற் கலந்
தாங் குறைந்தன ருலகெலாம் வியப்ப. (உ0)

வலம்பெரு தவத்துக் காகமா முனிவர் மகிழ்சிவ
யோகியா யிருந்து, நலந்தரு பூசை புரிந்தகா ரண
த்தா னவிறுமப் பூசனை யுகந்தாங், கிலங்கெழிற்
பரமன் றன்னையோ கீச னென்னவே திடுவரப் பர
மன், றலந்தனை யோகிச் சரமென வுரைப்பார் தர
ணியி லறிவிரு லெவரும். (உக)

அனையமா முநிவ ராண்டொரு தீர்த்த மமைத்
தன ரதிற்படிந் தோர்வெவ், வினைகளைத் துணை
யு மிருந்திடா தோடு மேவியப் புனலிடை மூழ்கி,
நனையு குமலர்த் தொடைபுனை புயத்து நான்மறை
யவர்க்கிரு நிதியந், தினைபள வுதவி செய்தன ரா
யிற் சிவனுல கடைந்துவிற் றிருப்பார். (உஉ)

அவர்சுர நதியிற் படிந்துமுன் மிகவு மகமகிழ்ந்
தெழுந்திடு தானங், குவலயம் புகழப் பதியினிற்
கங்கா கூபமென் றிலங்கிடு மினிய, தவமுநி விர்
கா என்னதன் மகிமை சாற்றுவன் கேண்மெனப்
புகன்று, நுவலையுட் கொண்டு முநிவர்க ளெவரு
முப்ந்தன மியாங்களென் றுரைத்தார். (உங)

காகமுநிச் சருக்கம்

முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - கூாகூ.

# ஒன்பதாவது

# கங்காகூடச் சருக்கம்.



எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பங்கமி றவத்துக் காகமா முனிவர் பைம்பொழிற் காசியி லோங்கு, கங்கையின் கரைமே லருந்தவம் புரிந்த காலையிற் கண்ணுதன் மூர்த்தி, மங்கல மருவு முயர்சிவ லோக மான்மிய மவர்தமக் குரைத்த, தங்கறிந் திலகு கங்கையா னவளு மருந்தவம் புரிந்தனள் மாதோ. (க)

ஈசனங் கெதிரோ தருமமால் விடைமே லிமைய மால் வரைக்கொடி யுடனே, வாசமென் மலரின் மழையிமை யோர்கண் மகிழ்வொடு பொழிந்திட வுதித்தா, னேசமார் கங்கை டணிந்தன ளெழுந்து நின்றுதோத் திரம்பல மொழிந்தாள், காசணியுரக வேணியா னுன்று கருத்தினிற் குறித்ததென் னென்றான், (உ)

கற்றவர் புகழுங் கங்கைதா னிறையோன் கம லொண் முகந்தனை நோக்கி, நற்றவக் காக முனிக்கு நீமுன்னர் நவில்சிவ லோகத்தி லடியா, ளுற்றனை யினிது பணிந்திட வேண்டு முனைத்திடு மிவ்வ ரங் தருதி, சிறறிடை யாக வெனமகிழ்ந் திசைத் தாள் சிவபெருமானுரைத் திடுவான். (ங)

பன்னுமா தவனக் கேகிய நெறியே படர்தியெ
ன் றுரைத்தன னகன்ருன், அன்னவள் மிகவும்
விருப்பின ளாகி யந்நெறிக் கூடினர் வானோர்,
துன்னுமத் தலத்தி னளையமா முனிவர் தோன்றிய
வாவியி லெழுந்தாள், மன்னிய மீன மாதிக ளுட
னே வாரியி னுருவதாய் மன்னே. (௪)

அவ்வகை யெழுந்த கங்கைநல் லணிநீ டத்தலந்
தனைவலமாகச், செவ்விதிற் பரவிப் படர்ந்தன ள
ளைய செழுந்தனி நகரினோ ரதுகண், டிவ்வதி சய
மிங் கென்னென வுரைப்பா ரிசனே யறியுமென்
றிசைப்பார், தெய்வநன் னதியிவ் வுயர்சிவ லோக
தெரிசனஞ் செயவந்த தென்பார். (௫)

பண்டுபோ லிந்தப் பதியின்மா தவமப் பகீர
தன் செய்யுமோ வென்பார், மண்டுநீ ரோங்கிப்
பெருகிடி லிளைய வளநகர் தாங்குமோ வென்பார்,
வண்டுகுழ் கடுக்கை தாங்கிடு மிறையோன் வார்ச
டை தாங்குமென் றறைவா, ரண்டர்தம் பெருமா
ன் றிருவரு ளிளையிங் கறிகுவ மின்றெனமொழி
வார். (௬)

வந்தெதிர் மலர்கொண் டருச்சனை புரிந்து வந்த
னை செய்துபோற் றிடுவார், சுந்தர மருவு குடங்க
ளின் முகந்து தூயதம் மனைகளிற் றெருகுப்பார்,
சிந்தையிக் குவளை கொண்டுகொண் டிதனைச் செ
ன்னிமேற் றெளிப்பர்கள் படிவார், மந்திர மூன்.

றுந் தனித்தனி யுரைத்து மலர்க்கையி லேந்தியுட் கொள்வார். (எ)

அந்தரத் திருக்கு மமரர்தங் கணங்க ளணுகிய கங்கையை நோக்கிச், சுந்தர வதன வனிதையே யிறையோன் றூயசெஞ் சடைவளர் மானே, யிந் தவண் கடல்சூழ் மேதினி யிடத்தி னிலகிய வுயி ர்த்தொகை புரிந்த, பந்தவல் வினைக ளனைத்தையு மொழிக்கும் பாவையே யெனப்பலதுதித்து. (அ)

எண்ணில்வா னவர்கள் மாதவர் பிறர்க ளெவர் களு மோங்கிடுங் காசி, நண்ணின ராகிப் பணிந் திட நின்னை நாடுவ ராதலி னீதான், வண்ணமென் சோலைக் காசிமா நகரை மருவிட வேண்டுநீ யன் றிப், பண்ணமா மறைகள் புகழ்ந்திடு மனைய பதி சிறப்பெய்துமோ வென்றார். (கூ)

மற்றதன் பின்ன ருபர்சிவ லோக மன்னவன் றனையெதி ரிறைஞ்சிக், கற்றைவார் சடையா யு மையொரு பாக காசிமா நகரினிற் கங்கை, யுற்றி டக் கருணை புரிதிநீ யின்னு ளுரைகினே ரிழைத் திடு பாவப், பற்றெலா மகற்றி யிருப்பவளன்றே பகருமப் பதியிடை யென்றார். (ய)

இப்படி யமர ரிசந்திடக் கங்கை யிலங்குபொற் கோயிலிற் புகுந்து, துப்பன சடையா னடிபணிந் திடமுச் சுடர்விழி காளகந் தரத்தா, னப்பகி ரதி யைப் பார்த்துநீ யணைந்திவ் வணிநகர் பார்த்தனை

யினிச்செல், றெப்பனை யுடைய காசிமா நகரி னு
றைகென வோதின னுவந்தே. (கக)

பரமனிவ் வாறு பகரா லிலங்கப் பகிரதி தமிப
னே னிவைய, வரமுறு சிவலோ கத்தினிற் சிலநா
ள் வாசமுற் றிருந்ததன் பின்னர், திரமுறக் காசி
மாநகர் முன்னர்ச் சென்றினி திருந்திடக் குறித்
தேன், புரமெரித் தவநின் னருளிது வாகிற் போ
துகின் றேனெனப் புகன்றாள். (கஉ)

கன்றுபா னிடத்தோ னதற்குநீ யின்று கார்த்
திகை மதிமுதல் வார, மென்றறிந் தனைசென் றி
யாண்டுத டோறு மிசைந்திடு கார்த்திகை மதியி,
னென்றிய விரவி வாரங்க டோறு மிவ்வூரிலின்
றெழுந்தகூபத்தி, லுன்றனி யுளநீ டுவகையுற்
றிடவந் துறைந்தினி தேகெனப் பணித்தான். ()

குன்றினை வளைத்தோ னித்திறம் புகலக் கோ
தில்சீர்க் கங்கைநா னிறைவ, நன்றெனப் பணிந்
தாங் கதன்றகூபத்தி நண்ணியொண் காசிமா நக
ருங், கன்றுவந் தணைந்தா ளன்றுதொட் டிறை
யோ னருளிய தினந்தொறு மதனிற், சென்றுசெ
ன் றிருந்து மனமகிழ்ந் திலங்கு திருவளர் காசியி
லணையும். (கச)

ஆலிற் கங்கா கூபமென் றதனுக் கணைந்த
தோர் நாமமீ டதனிற, காதலிற் புனல்கொண் டா

டினுஞ் சிரத்திற் கருதியோர் திவலைசேர்த் திடி னும், பூதலம் புகழுங் காசியி லணைந்தப் புண்ணிய நதிதனின் மூழ்கி, மாதவ மறையோர்க் கரும்பொ ருளீய்ந்த வண்மையிற் கோடிமே லதிகம். (கரு)

அந்தநற் றீர்த்தந் தன்னைநேர் கண்டோ ரங்கை யாற் பரிசனஞ் செய்தோர், கந்தமார் பொழில்சூழ் காசியி லணைந்து கங்கையா டியபலன் பெறுவார், நந்தலி னெழில்சேர் கார்த்திகை மதியி னண்ணிய வாரத்தின் மூழ்கி, னிந்தரா வணியுஞ் சுந்தரச் சடையோ னினிதுறை கயிலையி னிருப்பார். (கசு)

குவலயம் புகழ விளங்கிடு கங்கா கூபத்தி னோர் குட நீர்கொண், டுவகையிற் படர்ந்தாங் கெழிற் றிருவெண்ணீற் றுமையுட னினிது வீற்றிருக் குஞ், சிவபரஞ் சோதி மணிமுடிக் காட்டுந் திறத் தினோர் செல்வனன் கெய்திக், கவலையொன் றில ராய் வாழ்ந்துபின் னெங்குங் கண்ணுதற் பாலு லகடைவார். (கஎ)

என்றதன் மகிமை விரித்துரை சூத ரெழின்மு கப் பங்கயம் நோக்கி, நன்றிதன் மகிமை யறிந்தன மகிழ்ந்தே நம் ஞானசம் பந்தரங் கணைந்து, மன்றல் செய் தனமொன் றுரைத்தனை யருளான் மற்றவர் பெருமைக ளனைத்து, மொன்றிய படியிங் குணர்த் துக வென்னு வுரைத்தனருபர்ந்தமா தவத்தோர்

மாதவத் தவரிவ் வாறுரைத் திடலு மனமகிழ்ந்
தவர்தமை நோக்கிச், சூதமா முநிவ ரந்தணி ரனைய
சுடர்விழிச் செஞ்சடைப் பெருமான், காதலரான
ஞானசம் பந்தர் கதையினை யவர்திரு வருளா,
லோதுவ னீவி ரனைவரு மதனை யுறுதியாய்க் கே
ண்மினென் றுரைப்பார். (கக)

## கங்காகூபச் சருக்கம்.

முற்றிற்று.

---

ஆகத்திருவிருத்தம் - ௫௫௨.

## பத்தாவது

# ஞானசம்பந்தச் சருக்கம்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பிரமபுரத் துடன்வேணுபுரம்புகலி வெங்குருசிர்
பிறங்கு தோணி, புரமினையோர் பணிந்தேத்தும்
பூந்தராய் சிரபுரநற் புறவஞ் சண்பை, வரமுதவு
காழிநகர் கொச்சையெனப் பன்னிருபேர் மருவி
யோங்குந், திரமுறுவன் கழுமலமா நகரமெனப்
புவிபுகழுந் திருவா ளூரில். (க)

அந்தணர்தங் குலத்திலுயர் கவுணியகோத் திர
மென்னு மதனைப் போற்ற, வந்துதித்தார் சிவபாத

விருதபொன் றொருவரவர் மனைவி யார்தா, மிந்த
நெடும் புவிபுகழப் பகவதியா ரெனுநாம மியைந்து
வாழ்வார், கந்தமலர்க் கோதையினு ரந்தவருந் ததி
போற்றுங் கற்பின் மிக்கார். (உ)

இருவர்களுஞ் செஞ்சடைமேற் பசுங்கதிர்வெ
ள் பிறையிதழி யிலங்க வேய்ந்த, திருமலர்தன்
மலரடியே பரவிவரு மன்பினராய் நிலவு நாளிற்,
பொருதிரைநீர்க் கடல்புடைசூ ழுலகினிடைச்சம
ணரொடு புத்த ரென்னுங், கருநிறமா முகிலினங்
கள் பொய்மாரி பொழிந்த வெங்குங் கலந்தெ
ழுந்தே. (௩)

ஆதலினு லருமறையா கமவழக்க மருகிவிற்
கை யனங்கங் காய்ந்த, நாதனடி யவர்பூதி சாதன
ம்போற் றிடாதல்கண்டு நாள்க டோறும், போத
முறு சிவபாத விருதயர்நீ டின்னவினைப் பொரு
ந்தி நின்று, திதனுகு பரசமயத் தினையழிக்கு மக
ப்பெறுவான் சிந்தை யுற்று. (ச)

அரியதவம் பலபுரிந்தா ரவ்வாறு திருத்தோணி
யகத்தி லென்றும், பெரியவா னவர்போற்றப் பெ
ரியநா யகியுடன்வாழ் பெருமான் பாதத், துரியகா
தலிற்பரவுங் கருந்தடங்கட் பகவதியா ருதரந் தன்
னிற், றெரியுநான் மறைகளொடு புவிவாழத் தனிக்
கருப்பஞ் சேர்ந்த தன்றே. (ரு)

அதுவுணர்ந்தங் கெழில்பெருகு திருத்தோணி
வளர்பெருமா னருளை வாழ்த்தி, முதுமறைநூல்
விதிச்சடங்கி னைத்துமதி யினுமினிது குறையி
னேங்க, மதுமலர்ப்பங் கயம்புனையுங் கேளிருடன்
புரிந்துமன மகிழுங் காலை, விதுபுனைவார் சடைப்
பரமற் குரியதிரு வாதிரையாம் விளங்கு நாளின்.

தினகரனே முதலாய கோட்களெலா முச்சம
திற் செழித்து நிற்கக், கனமுறுநல் லோரையி
னிற் பரசிவன்ற னருளதனாற் ககனந் தன்னி, வி
னமுறுமந் தாரமலர் மழையினைப்போற் பொழிந்தி
டவே ழிசையுமோங்க, வனவரத மன்பர்மனமகிழ்
ஞான சம்பந்த ரவதரித்தார். (எ)

அங்கதுணர்ந் தருமறையோர்க் கம்பொன்முத
ற்றனங்க ளான வெல்லா, மங்கலநா ரியமுழங்க
மறைமுழங்க மகப்பயந்தார் மகிழ்வி னீய்ந்தார்,
திங்கணுதற் கொடியிடைபா ரவைகையொடு மனை
கிளைஞ் செழும்பொற் சுண்ணம், பொங்குகதிர்
மணிவிளக்கு நிறைகுடமா திகளினுயர் பொற்புச்
செய்தார். (அ)

இத்தகைய திருத்தோணி புரத்தினெங்கும்
பொற்புறச்செய் தேவருந் தங்கள், சித்தமகிழ்ந்
திடவேத விதிச்சடங்கை யிருதினமுஞ் சிறக்கச்
செய்து, நித்தனுயர் திருவருளாற் றிருநாமஞ் சமு

தனை நிறுத்தி ஞர்நற், சுந்தமுறு சிவபாத விதய
ரென வுலகுணைக்குந் தோன்ற லார்தாம். (கூ)

பேருலகம் புரிதவத்தின் பயனுகி வந்தருளும்
பிரானுர் தாமு, மேருலவும் பிறைபோல வளர்ந்
தொருமூ வருட்மினி தெய்துங் காலைச், சிருலவு
மொருதினத்து வேதவிதி முறைச்சடங்கு செய்வ
தற்கு, நீருலவும் புனலாடச் சிவபாத விருதயர்தா
நினைந்து சென்ருர். (ய)

எழுசிர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

மற்றவர்சென் றிடுபொழுது மதலையாரு மார்பி
னிலும் படையும்விலை மதிக்க வொண்ணு, நற்ற
ரள வடமுமசைந் தாடச்சுட்டி நறுநுதலின் செ
யிலெறிப்ப நலங்கொள் காதி, னுற்றமணிக் குழை
மின்ன மதாணிமொய்ம்பி னேங்குகவின் காட்ட
வுயர் காஞ்சி காமர், பற்றிடையி னிலங்குமணி
வளைமுன்கையிற் பகல்விரிக்க வணிச்சிலம்பு பத
த்தி னேங்க. (கக)

நடந்துமனை முன்றினிற்பின் சென்ருரிச னளி
னமலர்த் தாண்மறவா மனத்தர் முன்னர்ப், படர்
ந்திடுவ தனையொழிந்து முனிவுசெய்யும் பான்மை
யர்போல் விலக்கறுமி ளாது பின்றும், தொடர்ந்தமு
தாங் கணைந்திட்டா ரினியென்செய்வா தூயசிவ
பாதவிரு தயர்தா மன்ஞு, ருடன்பாமர் திருக்கோ

யில் புகுந்துவாவி யுறுகரைமே லவர்தம்மை நிறுத்திப் பின்னர். (௧உ)

கொச்சகக்கலிப்பா.

பிரிவதனக் கச்சமுற்றுப் பெருந்தோணி வீற்றிருந்த, கரியதனி திருமிடற்றுக் கண்ணுதலைக் கைதொழுது, விரிபுனலார் வாவிதனுண் மேவியே மூழ்கினாரங், குரிமையுடன் மூழ்குதலு முயர் ஞான சம்பந்தர். (௧௩)

அன்னவரைக் காணாரா யங்கையினல் விழிபிசைந்து, பன்னுதிசை யனைத்தினையும் பார்த்தழுவார் வேற்றடங்கண், மின்னிடையாள் பாகனருள் மேவு*பத மாதலினற், றென்னிலகு திருந்தோணிச் சிகரம்பார்த் தழுதனரால். (௧௪)

பாணிமெழிற் புவிபுரைத்த பருவமதின் மிகந்தபெருந், தோணிவளர் பிரானவர்க்குந் தூயதிருவருள்புரிவான், வாணுதற்பூங் கோதையுடன்மால் விடையின் மிசையேறிச், சேணிலவு புகழ்வாவிச் செழுங்கரையின் வந்தணைந்தான். (௧௫)

வந்துலகந் தனையீன்ற மாதினெழின் முகம்நோக்கிச், சுந்தரமார் துணைமுலைகள் சொரிகின்ற பாலமுதைச், சந்தமுறும் பொற்கிண்ணந் தனிற்கலந்

*பதமென்பது பரிபாகக் காலத்தினையதாவது திரோதானசத்தியே அருட்சத்தியாய் முதிர்ந்த அவசரம்.

து நீயினிதி, னிந்தமக விஞக்கூட்டு கெனமகிழ்வி
னிசைத்திட்டான். (கசா)

அண்ணலருள் செய்திடஅு மம்பிகைசென்
றணியுறுபொற், கிண்ணமதி னித்திலத்தண் கிள
ரொளிப்பூண் பரித்திருக்கும், வண்ணமுலைப் பால்
சுரந்து வளர்*சிவஞா னமுங்கலந்தே, யுண்ணிலவு
மன்பினுட னுண்ணமுதென் றூட்டினுள். (கஎ)

செழுமலர்க்கண் ணீர்துடைத்துச் செங்கையிற்
பொன் வண்ணமளித், தழுகுதைதிர்த் திறையோனு
மருள்புரிந்தா னுதலினு, லெழின்மருவு சிவஞான
சம்பந்த ரெனுநாம, முழுதுலகந் துதிசெய்யப்
பெற்றனராம் முன்னவனுர். (கஅ)

ஓதரிய சிவஞான முணர்ந்தவரிப் படிநிற்கக்
காதலுறு தாதையார் கடிதினெடும் புனலாடி, வே
தமுறை நியமங்கண் மேவுறச்செய் தெழிற்கரை
யின், மீதணைந்தன் னவர்தமரு விதுவலைய முக
ஞேக்கி. (கக)

எவருனக்கிப் பாலடிசி லெச்சின்முயங் கிடக்
கொடுத்தா, ரவர்தமைக்காட் டெனமுனிவுற் றங்
கணுருவ ளாரையெடுத், துவமையில்லவர்தாளி

*சிவஞான மென்பது தானே தற்பிரகாசமும் பரப்
பிரகாசமுமாய் எல்லாப் பொருள்களையும் இனிது விளக்
கும் அருளுணர்வினை.

ஞேச்சுதனும் பதமெடுத்துச், சிவமுணர்ந்த மகிழ்ச்சியினிற் செழுமலர்க்கண் புனல்பொழிய. (௨௰)

தூயமலர்ச் செங்கையெடுத் தொருவிரலாற் சுட்டிவளர், பேயனைய தோளியுடன் விடையின்மிசை யிருவிசும்பி, ஞயுமறைக் குலத்தினுட னமரர்குலம் பணிந்தேத்த, நேயமுட னின்றருளு திருமலையை யெதிர்காட்டி. (௨௧)

தனிமையுறு சிவஞானந் தானத்து ளடங்காமை, யினிமையுறப் பொங்கிவழிந் திடுவதென மறைப்பொருளாம், புனிதவுறு மடையாளம் புனைந்து தமிழ்ப் பதிகத்தா, லெனதுமனத் தனைக்கவர்ந்தோ னிவனென்றங் கிசைத்தனரால். (௨௨)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

வேதநெறிச் சிவபாத விருதயர்க்கிவ் வாறிசைத்து விமல மூர்த்தி, பாதமலர்த் துணைதொழுது திருஞான சம்பந்தர்பாங்கி னிற்க, மாதவள விடைப்பாகன் றிருவருள்கண் டிமையோர்கள் மகிழ்ச்சி யெய்தி, மேதகுநாண் மலர்மாரி பொழிந்தனரால் விசும்பென்ன விசும்பி னின்று. (௨௩)

இந்திரன்மா லயன்முதல்வா னவருமுனி வருமகிழ்ந் தேத்த வானத், துந்துமியேழ் கடலின்முழங் கிடநின்ற கறைமிடற்றுத் தூயோன் மிக்க, சந்தமுறு விடையின்மா தேவியொடுந் திருந்தோ

ணி தன்னிற் சார்ந்தான், செந்தமிழ்மா மறைதுதி த்தா ரதுகண்டு கோயிலுனுட் சென்று ரன்றே.

பெற்றமூர்ந் தவர்தம்மைத் தாதையர்காண் கில ரேனும் பெருகுமேன்மை, பற்றுதனிக் காதலனு *ிருஞான மொருங்குணர்ந்தார் பரிந்து போற்று, நற்றமிழின் பொருளினொடு நிகழ்ந்தவையு முணர் ந்துசண்பை நம்பர் தன்மை, யுற்றதிரு வருளிது வாமெனத்தெளிந்து வியப்பினுட னுவகையெய்தி

செங்கமல மலர்க்கைகுவித் தாடினர்கா தலர் பின்னர் சென்று ரப்போ, தங்கதுகண் டவர்களுட னல்லாமெல் லாருமதி சயித்துத், துங்கமணிக் கோயிலெழின் வாயிலின்பாங் கரின்வந்து சூழ நின்றார், சங்கானைப் பணிந்தேத்தி யருள்பெற்று மீண்டனர்பார் தழைக்க வந்தார்.    (உகூ)

மன்னு தனிப் பாம்பொருளைத் துதித்தருள்பெ ற்றகமகிழ்ந்துவருகின் ருரைப்,மன்னுமறை யோர் முதலா யங்கணைந்தே யெவருமெதிர் பணிந்துபோ ற்றிந், துன்னுமகமகிழ்ச்சியுட னதிசயமுற் றெம் மருங்குஞ் சூழ்ந்தா ரப்போ, தென்னையா னுடை

*இருஞான மென்பது பாஞானம் அபாஞானமாகிய இரண்டினை. என்னை, "உயர்ஞான மிரண்டாமாலு மல மால வகலாத மன்னுபோதத் திருவருளொன் றென்றத னைத் தெளியவோதுஞ் சிவாகமம்" எனச்சொற்றவன் குடிமுதலியார் கூறினாகலின் என்க.

யவரைத் தாதையார் தோளின்மிசை யெடுத்துக்
கொண்டு. (௨௭)

களிப்பினுட னெடுவீதி வலமாக வரும்போது
கயற்கணார்கள், வளத்தினுறு தங்கண்மனை வாயின்
மணி நெற்றிதோறு மகிழ்ந்து காமர், விளக்கி
னொடு பூரணகும் பமுநிறைத்து மணிமேடை
மீது மேவித், களத்தினுறு மலர்தூவி வாழ்த்தி
னர்விண் ணொழின்மகளிர் தமைப்போ னன்று. ()

கொல்லைவநறுங் கனித்துவர்வாய்த் தாளநகை
யிளமுல்லைப்பூங் கோதை மாத, ரிவ்வனஞ்செய்
திடவினிய மங்கலதூ ரியமுழக்க மெங்கு மோங்
கச், செவ்வினிற்சென் றணிவளர்தம் மணிமாடத்
துட்புகுந்து செங்கை யொன்றி, னவ்விவளர் சிவ
பெருமான் பதங்கருதி யிருந்தனர்மெஞ் ஞானம்
பெற்றார். (௨௯)

அன்றிரவங் கமர்ந்தருளிக் கதிருதிக்குங் காலை
யிற்சென் றவர்பொற் றேரணி, வென்றிமழுக் கர
த்தினனைக் காதலுடன் பணிந்தேத்தி விரிநீர்
வாவி, துன்றுபகட் டிளவாளை பான்மடிமீ தினிற்
பாயத் துலங்கு மேதிக், கன்றெனநின் றிரங்கி
நறும் பால்சொரியுந் திருக்கோலக் காவிற் சென்
றார். (௩௰)

சென்றுமரன் கோயில்புகுந் திறைஞ்சியெழுந்
தெதிர்நின்று செங்கை தன்னா, லொன்றியவொத்

தறுத்தினிதி னிசைப்பதிக மகமுருக வோதும் போதிற், றென்றிசைக்கா லனையுதைத்தோ னஞ் செழுத்தும் பொருந்திலங்குஞ் செழும்பொற் ருள, மன்றிறைவ னருளாலங் கவர்கரத்தின் வந்த தவர் மகிழ்ச்சி கூர்ந்து. (௩௧)

சென்னிமிசை கொண்டுபொன் னனையதிருந் தாளத்தாற் சிறக்க வொத்தி, மன்னுமிசைத் திரு ப்பதிகம் பாடிநின்று ரவர்மதுர வாயி னேங்கு, மின்னிசையுந் திருத்தாளத் தோங்கியநா தமுநோ க்கி யிமையோர் வானிற், றுன்னுமவர் மழை பொழிந்தார் தும்புருநா ரதர்வியந்து துதித்திட் டார்கள். (௩௨)

அனையமணி பொற்றுளம் பெற்றவரீ சனைவணை ங்கி யங்கு நின்றும், புனையெழிற்பூம் பொழிற்கா ழி நண்ணுவார் நடந்துசெலும் போது கூடி, நினை வரிய புகழ்தாதை பார்புயத்தி னெடுத்தேக நெ டுசீர்க் காழி, தனையடைந்து திருத்தோணி வளர் பெருமான் றிருமுன்னர் தாழ்ந்தெ ழுந்து. (௩௩)

ஓங்குமிசைத் திருப்பதிகந் திருத்தாள வொத் திறுட னேதிப் போந்து, தாங்குமெழின் மணி மாடத் தெழுந்தருளி ஞான்று தகைமி னிடு, பா ங்கினுள பதிகளினுஞ் சென்றதன்பின் னிறை யோனைப் பணிந்து போற்றி, வாங்குகடற் புவி புகழ வைதிகஞ ரிவ்வாறு வைகு நாளின். (௩௪)

நீணிலமுய்ந் திடவுதித்த விவர்தமைக்கண்
டிறைஞ்சுதற்கு நீல கண்டப், பாணரவர் மனைவி
யா ருடன்யாழ்கொண் டெயர்காழிப் பதியின் வந்
தார், காணவரு மவர்வரவு தனையறிந்து நெடிதாவந்
து காழி மன்னுந், தாணுவின்ற வருள்பெற்று ரெ
திர்கொண்டா ரவரணைந்து தாழ்ந்தெழுந்து. ()

துதித்தெதிர்நின் றனரவரைக் கவுணியர்தங்
குலத்துவரு தோன்ற லார்தா, மதித்தனிமா முக
மலர்ந்து நோக்கிநீ ரிங்கினிது வரப்பெற்றேமெ
ன், றுதித்தகரு ணையினுடனங் கிசைத்தழைத்துக்
கொடுசென்றார்ந் தோங்கு கங்கை, நதிச்சடையார்
திருக்கோயிற் புறமலிமுன் றிலினிடத்து நண்ணி
நின்று. (௧௬)

பணிவித்து நம்பெருமாற் கிசையாழின் இப
ற்றுகென்றார் பாண ரூர்தாந், தணிவில்பெருங்
காதலுட னிறைஞ்சியா ழினையிடத்திற் றழீஇப
தன்பின், னணிநரம்பு நெறித்துமா டகமுறுக்
கித் திவவுதனி னைமய விக்கித், துணிவுபெற
மென்சுருதி கூட்டிவிரற் கனைத்தானந் தோறு
மூய்த்து. (௧௭)

அந்தமுள விசைத்திடேங்கா னுடற்குற்ற மெழு
வதனெ னுறுகுங் குற்ற, முந்துபகிர்த் திடபாடந்
றெழிற்குற்ற மிவைகளின்றி மொழிந்த பண்
பால், மந்தமத் திமதார மெனுமூத்தித் துள்ள

லொடு மருவு தூங்கல், சந்தமுற மெலித்தலென
வின்னிசைநூ லுரைத்தவிதி தழுவிக் கொண்டு.

வேற்றடங்கட் பாடினியா ருடன்பாடி யொரு
வரு மேன்மை யாகப், போற்றிடும்யா ழிசையி
னுட னிருவர் திருமிடற்றிசையும் பொருந்தி யோ
ங்கு, மாற்றலுணர்ந் தருள்ஞான முதல்வர்முத
லெல்லோரு மகம கிழ்ந்தார், பாற்றரள முறுவ
லினு ருடன்பாண ரொருநாமும் பணிந்து நின்றார்.

அன்னவரைத் திருஞான சம்பந்தர் கொடுசென்
றுங் கவர்க்கு நன்கு, மன்னுமட மமைத்துவிருந்
தளித்தனரான் றோர்புகலி வள்ள லார்தாம், பொன்னி
தழித்தொடையாரைப் போற்றுதிருப் பதிகமெ
லாம்பொருந்தக் கேட்டுத், துன்னுமகிழ் வினராகி
யாழினிலிட் டிசைத்தினிது துதித்துப் பின்னர்.

பன்னுபுகழ் கவுணியர்கோ னடிதொழுது நீரி
சைக்கும் பதிக மெல்லா, மின்னதனி யாழதனி
லிட்டெளியே னுவந்தருகி னிசைக்க வேண்டு,
மென்னவுரைத் தனாதனுக் கவர்மகிழ்ந்தா ரன்று
தொடுத் தென்றுமோங்கு, மின்னிசையாழ்ப்பாண
ருமவ் வாறியற்றிப் பிரியாம லிருந்தார் மன்னோ.

கொச்சகக்கலிப்பா.

ஆங்கதன்பின் காழிவள ரருள்ஞான சம்பந்தர்,
தேங்கமழ்பொ ழிற்றில்லைத் திருச்சிற்றம் பலத்
தாடு, மோங்குமறைத் தனிப்பொருளி னெண்ம

லர்த்தாள் பணிந்தேத்த, தாங்குமனக் காதலுடன் சண்பையார் தாள்போற்றி. (சஉ)

பரவுபுகழ் தாதையர்தம் மொடுமியாழ்ப் பாண ரோடும், விரவுதவத் தொண்டரொடு மேதகுநீள் வழிக்கொண்டு, மருமலர்ப்பூம் படம்போர்த்து வரு புனற்கொள் ளிடங்கடந்து, திருமலர்தண் மலர்ப் பொய்கைச் செழுந்தில்லை மருங்கணைந்தார். (சங)

மகரதோர ணங்கதலி மணிவிளக்கு நிறைகுட ங்கள் புகரில்செழுங் கேதனங்கள் பூந்தொடைக ளாலணைய, நகரமினி தலங்கரித்து நான்மறையோ ரெதிர்சென்று, புகலியர்தங் காவலனைப் பொன் மறுகிற் கொடுபுகுந்தார். (சச)

கவுணியர்தம் பெருமானர் கலந்தபெரு மகிழ்ச் சியொடு, தவமறையோர் விதிதனைச் சார்ந்துப ணிந் தகன்றபோ, யுவமையில்சீர் கொண்டிலங்கு முயர்நிலைகோ புரந்தொழுது, சிவமருவு கோயிலி னுட் சென்றுவலஞ் செய்தருளி. (சரு)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

அருமறையின் நல்லப்பொருளா யகண்டபரி பூர ணமா யளவி லின்பந், தருகருணை வுருவதுவா யுயிர்க்குயிரா யற்புதமாய்த் தனியில் சோதி, பொ ருவரிய கனகமணிப் பொதுவினிடை நின்றிமை யோர் போற்றி செய்யத், திருநடனம் புரிந்த

ருளு மொருமுதலின் முன்னனுகச் சென்றார் மன்னோ. (சக)

சென்றனைய பரம்பொருளைக் கண்டுமலர்க் கண் களிப்பச் சென்னிமீதி, லொன்றுமலர்ச் செங்கை குவித் தானந்த மினிதடைந்துள் ளுருகி நின்று, துன்றுமிசைத் திருப்பதிகங் கொடுபோற்றி யருள் பெற்றுத் துலங்கு மன்ன, மன்றுதனை வலமாகப் புரம்போந்து மணிமுன்றில் வணங்கி யேகி. ()

தேசுமலி மதிற்றில்லை நகர்நீங்கி வேட்களத் திற் சென்று நீடு, பாசுபதக் கடவுளடி பணிந்தே த்திச் சிலநாளப் பதியின் வைகிப், பேசுபுகழ் கழி ப்பாலை நெல்வாயின் மருவியிளம் பிறைநீர்க் கங் கை, காசுபுனை யரவமுது சடையானைப் பணிந்து தமிழ்க் கண்ணி சாத்தி. (சஅ)

பின்னுமெழிற் றில்லைநக ரணைந்துநடம் புரிந்த ருளும் பெருமான் செய்ய, பொன்னடித்தா மரைப் பணிந்து போற்றிசைத்தாங் ககன்றனரப் பொ ழுதி லோங்கு, பன்னிசையாழ்ப் பாணனார் தமி யனேன் பதிமுதலாம் பதிகள் சென்று, மன்னு குட திசையிலான் றனைப்பணிய வேண்டுமென வணங்கிச் சொன்னார். (சகூ)

ஆங்கதனுக் கிசைந்துபோ யனையபெரும் பாணர் பதி யான மேன்மைப், பாங்குபெரு மெருக்கத்

தம் புலியூ ரிலணைந்தரனைப் பணிந்து பின்ன, ரோங்குதிரு முதுகுன்றம் பணிந்தேத்திச் சிலபகலங் குறைந்து மேரு, வாங்குதனிக் கார்முகத்தோன் வளர்பெண்ணு டகஞ்சென்று வணங்கிப் போற்றி.

கலிநிலைத்துறை.

தேனி லங்கிய மலர்ப்பொழிற் றிருவரத் துறையின், வான நாடரு நாடரு மருந்தினைப் பணிவான், ஞான மார்புகழ் தாதையார் நவிலுமா தவத்தோர், மான மார்பரி சனங்களு மருங்கினிற் சூழ்ந்து. ()

தொடர்ந்தி டப்பல பதிகளுஞ் சோலையும் பிறவும், கடந்து தாண்மலர் சிவந்திடக் களத்தினிற் களங்கொள், விடந்த ரித்தவ னடியிணை தொழுதுவல் வினைவி, நடந்து சென்றெதி ரொருவஆம் பதியிடை நண்ணி. (௫௨)

இன்று பார்த்தனர் தந்தையார் தம்மொடு மிலவு, வென்றி மாதவர் குழாங்களு மிகுதியும் வருந்த, மொன்றி வந்திடுஞ் செயலினை யுணர்ந்தன ரினிநா, மின்றிவ்வூரினி லிருந்திட வேண்டுமென் றிருந்தார்.

அனைய காலையி லரத்துறை யமலனை வலிஞு, சினைகொள் பூம்பொழிற் காழிகா வலர்க்கினி நல்கும், புனையும் வண்சிவி கைக்கணி தாளத்தின் பொருட்டுக், கனைகடற் குளிப்ப வனெனக் கதிரவன் மறைந்தான். (௫௩)

புரிசை சூழாத் துறையுறை புனிதனுங் கெதி ரே, விரிசவித்தென தருவைகீள் வியன்பொழிற் புகலிக், குரிசில் கண்டுநின் றிறைஞ்சிடக் குட திசை யதனிற், றெரிச னங்கொடுத் திடலென வெழுந்தநு செல்வான். (௫௫)

ஆல முண்டவன் கவுணியற் களித்திடு சிவிகை, கோல வெண்குடை யணிசெயக் கொண்டிடு மெ ன்னு, மாலை வாணிக னிருட்படம் வானிடை விரி த்துச், சால நித்திலம் பரப்பல்போற் றங்கின வுடுக்கள். (௫௬)

கடுத்த னிக்களத் திறைபவன் கவுணியர் பிரா ற்குக், கொடுத்தி டச்செழுங் காலையிற் குணக டற் றன்பா, லடுத்த நித்திலக் குவையினுல் கவி கைநன் கமைத்து, விடுத்த தாமென வெழுந்தன வெண்கதிர்த் திங்கள். (௫௭)

மன்னு சீர்ச் சண்பை வள்ளலார் வழிவரு வருத் தந், தன்னை யோர்ந்தரத் துறையுறை *துறையுறு சடையோ, னன்ன வன்பதி தனில்வள ரன்பினேனு ரெவர்க்குந், தென்ன லர்கவர் மனைதொறுங் கனவி னிற்சென்று. (௫௮)

தரும நீடிய புகலி[illegible]ழ் கவுணியர்த் தலைவன், வ ருமவர்க்குநன் நித்தில வளங்கெழு சிவிகை, கு

* துறையென்பது ஆற்றினை.

ரும வளிக்குடை சின்னமெம் மிடற்றினிற் கொண்டு, பெருகு மன்பொடு சென்றெதிர்க் கொடு மென்று பின்னர். (ருகூ)

அங்கு நின்றெழிற் காழிகா வலரிடத் தணைந்து, தங்க நித்திலச் சிவிகைவெண் சுடர்க்குடை சின்னம், வெங்க திர்ப்பகல் வேலையிற் றேன்றிடு வேலை, யிங்கு நாம்தர விருதுநீ கொள்கென வி சைத்தான். (சுய)

போத முண்டவர் கண்டவான் பொருளினை யீன்ற, மாத வர்க்குமன் பினர்க்கு மங்கிசைத்தனர் வதிந்தார், சீத நீர்வயற் றிருவரத் துறையினிற் செல்வ, வேத வாணரும் பிறர்களு முணர்ந்தனர் வியந்து. (சுக)

மாறு றுங்கதி ருதிக்குமுன் மகிழ்வொடு சென்றார், நீலகந்தரன் கோயிலி னீடவ னருளாற், கோலநித்திலச் சிவிகைவெண் குடையொடு சின்ன,மேல நீடொரு மண்டபத் திருந்தன கண்டார். ()

கண்ட போதினிற் சென்னிமேற் கைகுவித் தார்த்தா, ரண்ட நாயக னருளினை வாழ்த்தினு ரவற்றைக், கொண்டு சென்றனர் மங்கலம் வியம் பல குமிற, மண்டு காதலிற் சிரபுர மண்ணலார்க் கெதிரே. (சுஙு)

பணங்கொள் பன்னகப் பூண்புனை பரமனைப் பெருகு மணங்கொள் பூம்பணை யரத்துறை வளம்பதி

யிடத்தில், வணங்கி யேற்றிடச் சூழ்ந்திடு மாத வத் தவர்கள், கணங்க டம்மொடு மெழுந்தனர் கவு ணியர் தலைவர். (கூச)

தென்ன லொண்சிர புரத்தவர் நெடிதுறங் கதி ரா, வின்ன லெய்தின றொன்றுநா மிருங்கட லொ ளித்தே, மன்ன வர்க்கரன் சிவிகையின் றளித்த லாற் செல்வா, மென்ன வந்திடு வாரெனனப் பா னுவு மெழுந்தான். (கூரு)

அந்த வேலையி லெதிர்சென்று ரவற்றினைக் காழி, வந்த மன்னர்முன் வைத்திவை மன்னரத் துறை வா, ழிந்து சேகரர் கொடுத்தன ருமக்கென விசை த்து, முந்த ரன்றமக் கிசைத்ததும் பணிந்தவர் மொழிந்தார். (கூசா)

காழி காவல ரத்துறை யரனருள் கருதி, யே ழி சைத்தமிழ் கொண்டுநின் றேத்தியங் கிசை த்து, வாழி யத்தனிச் சிவிகையி னேறினர் மகிழ் வுந், றூழி யார்த்தென முழவமு மறைகளு யார்த்த.

புலவர் வானிடை வானெனப் பூமழை பொழிய, நிலவு நித்திலக் கவிகையொண் சிவிகைமே னிழ ற்ற, வுலக மேற்றிட விறையவ னுதவுசின் னமும் வா, னிலகு காளமுந் தாரையு மெழுந்தமுன் னூர்ப்ப. (கூஅ)

சென்ற வத்துறை யணைந்துநித் திலமணிச்சிவி கை, நின்றி ழிந்துபூங் கோயிலிற் புகுந்து வெண்

ணிலவுங், கொன்றை யம்புனைந் தருளியச் செஞ்ச
டைச்சேரமான், மன்ற லம்புயத் தாள்பணிந் தே
த்தினன் மகிழ்ந்து. (௬௯)

இறையவ னிடருள் பெற்றுமீண் டிலங்குமப்
பதியில், குறைவி லாதமா தவத்தினர் குழாத்
தொடு மிலநா, ளுறைந்த லுற்றனர் வேணிமே லா
யிர முரார்த்தத், துறையி னுன்றனைப் புறத்துள
பதியினுந் தொழுது. (௭௰)

நன்று நாளினிற் காழிமா நகரினுக் கேக, வெ
ன்னை மெய்த்திவ் வரத்துறை யீசனை வணங்கி,
வன்னை கிர்த்திலச் சிவிகைமேற் கொண்டுநீள் வழி
யித், புன்னி யத்தலங் களினுறை புனிதனைப்
போற்றி. (௭௧)

வயலின் மேதிக ளுழக்கிட வாளைக ளெழுந்து
புயலின் மீதுறத் தாவிடும் புறம்பயத் தணைந்து
நயன மூன்றுள சோதியை நன்கெதிர் வணங்கி
யியலு மாதவர் குழாத்தொடுஞ் சிலபக லிருந்தார்.

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

அந்நெடும் பதியகன்று நெறியினூடு மான்ப
திக லனைந்து போற்றிக், கந்தமலர்க் குழன்மகளி
ராடலொடு பாடன்மிகுங் காழிச் சார்ந்து, சுந்தரப்
பொற் றேரணிவள ரிறைவனடி மலர்பணிந்து து
தித்து மீண்டு, தந்திருமா ளிகையினிற்சென் றினி
திருந்தார் புனிதமிகு தவத்தோர் சூழ. (௭௨)

இவ்வகையின் மணிமாடத் திருத்துவளர் பூங் கோயி லெய்திச் செங்கை, நவ்விதரித் திடுபரனைத் தொழுதுவரு நாளினுப் நயனஞ் செய்யுஞ், செவ்வியணை தனுமதனைச் செழுமறையோர் மகிழ்வினொடு செய்தா ரப்போ, தவ்வசைவே தியர்க்கெதிரே நின்றவரோ தினசருளா னைந்த வேதம்.

நற்றவமா மறையோர்க ளதிசயித்துத் திருத்தோணி நண்ணி வாழும், வெற்றிவிடைக் கொடியுடையா னிடத்தருளி னுயர்ஞான மேனை நாளின், மற்றவர்பெற் றிடுதன்மை கருதியவர் மலர்த்தாளின் வணங்கித் தாங்கள், கற்றிருந்த மறைகளிடை யையமெலாம் வினவிமனக் களிப்புற்றார்கள். (எரு)

ஒருமையுட னிருபிறப்பி னிலையெய்தி முந்நூனு முறத்திற்பூண்டு, பெருமைபெறு நான்முகன்போற் றைந்துதிரு முகமுடைய பெருமான் றன்னைத், திருமலிபொற் கோயிலிற்சென் றடிபணிந்து போற்றிசைத்துச் சிறப்பி னோங்கு, குருமலிமா மணிமாடத் தணைந்திருந்தார் சிவஞானக் குரிசிலார்தாம். (எசா)

பெருநாகக் கங்கணனைத் தோணியினிற் போற்றியருள் பெற்று மீண்டு, வருநாளி லன்னவர்தந் திறம்வினவி யவர்மலர்த்தாள் வணங்கவெண்ணி, திருநாவுக் கரசரங்கு சென்றனர்மேன் மனமகி

ழ்ந்து செல்வ நீள்பன், னிருநாமப் பதியதனுள் விருந்தளித்தன் னவருடனங் கிருந்தார் சின்னாள்.

மற்றதன்பின் திருநாவுக் கரசர்பரன் பதியனை வும் வணங்கச் சென்றார், புற்றரவச் சடையா னைத் தாமுமுயர் பதிகளினிற் போற்றற் கெண் ணி, நற்றவருஞ் சிவபாத விருதயரும் பாங்கினுற ஞானச் செல்வர், விற்றரளச் சிவிகையின்மேற் கொண்டுசென்றார் குடைநிழற்கீழ்மேல்பானோக்கி.

சென்றுபுகழ் புள்ளிருக்கும் வேளூரா திப்ப திபிற் செம்பொன் மேரு, குன்றனெடுஞ் சிலைய வனைப் பணிந்தேத்தி மகிழ்நாட்டிற் குலவு சோ லை, துன்றுமெழிற் றிருப்பாச்சி லாச்சிரா மத்த னில்வாழ் சோதி தன்னை, வன்றனிக்கை மதவானை யுரித்தவனைக் காதலொடும் வணங்கச் சென்றார்.

மன்னுமதன் முன்னனைய வளம்பதியின் வளர் கொல்லி மழவ னின்ற, கன்னன்மொழிச் சிற்றி டைவேற் றடங்கணெழிற் றாளநகை கன்னி தன் னைப், பன்னுமுய லகனெனும்வெம் பிணியணைந்து வருத்தியொரு பரிசி னுள், துன்னுமது திராம லிருப்பதனுற் சுற்றமொடுந் துயர மெய்தி. (அ௰)

மழவனந்தக் கொடும்பிணிதீர்ந் திடும்பொருட் டக் கமலமலர் வதன மின்னை, யெழினுறுபூங் கோ யிலினிற் கொடுசென்றுங் கிறைபவன்ற னெதிரே

வைத்துக், குழவிமதிச் சடையானைத் தொழுதிருந்தா ரவரணையுங் கொள்கை யோர்ந்து, செழுங்கரமினிதலங்க ரித்தெதிர்கொண் டிறைஞ்சியுடன் சென்றான் பின்னர். (அக)

தவளமணிச் சிவிகையினின் றிழிந்தருகவு ணியத்தலைவர் தயங்கு கோயி, லுவகையுடன் புகுந்துவலஞ் செய்திறையோன் முன்னணைந்தா ரொளிர்மெய் சோர்ந்து, பவளவிதழ்க் கொடியிடையா ளறிவிழுந்து நிலத்தணைந்த பரிசு நோக்கி, யிவடனக்கென் னெனவினவி னார்மழவ னிறைஞ்சியுற் றியம்பி னானால். (அஉ)

அதையுணர்ந்தக் கொடியபிணி தீர்ந்திடத்தன் புகலிநக ரண்ண லார்தாம், விதுபுனையும் பரம்பொருளைப் பாடுதலும் பிணிநீங்கி விரல்வேற் கண்ணாள், கதுமெனமுன் னெழுந்துதந்தை யிடத்தடைந்தா ளவன்மகிழ்ந்து காழி நாடர், புதுமணப்பங் கயத்தாளி லவளுடன்வந் திறைஞ்சியெதிர் போற்றி நின்றான். (அங)

பொங்குபெரு மகிழ்ச்சியுடன் றிருஞான சம்பந்தர் புனித வெற்பின், மங்கையிடத் தான்பாதம் பணிந்தகன்றன் னகரினிடை வைகிச் சின்னா, ளங்குநின் றெழுந்துபிற பதிகளினு மேகிவளர மலர்ப் போற்றித், திங்களணி மணிமாடச் செங்குன்றூர் தனிற்சென்று சேர்ந்தா ரன்றே. (அச)

அந்நகரிற் பரஞ்சுடரை வணங்கியருந் தமிழ்
பாடி யமருநாளின், மன்னுகுளிர்ப் பனிப்பருவ
மருவுதலு முலவுபெரும் பனிக்காற் றுமேல், மன்னு
மந்த காட்டிலுறு பதிகளின்வா முயிர்களெலாம்
வருத்த மெய்தத், தான்றுமவர் பரிசனமு நண்ணு
குளிர் வாடையிற் றுயர மெய்தி. (௮௫)

மற்றவர்க்கங் கதுதனைமுன் றுணர்த்தியடி பணி
ந்திடலு மன்னனார்தா, நெற்றிதனில் விழியுடை
யோன் றனைத்தொழுது பணிந்துயர நீங்கு மாறு,
நற்றமிழின் றிருப்பதிக மிசைத்தனரந் தினமே
யன் றுடனைத்து, முற்றபெரும் பனியுதவு பிணி
நீங்கிற் றியாவர்களு முவகை யுற்றார். (௮௬)

அத்தலத்தி னின்றெழுந்து நீடுகுண திசைநோ
க்கி யன்பிற் செல்வார், சித்தனுறை பதிகள்பல
பணிந்தேத்தி நிலவுமெழிற் பூவை யோது, சுத்த
மறை பொலியினொடு கீதவொலி முழங்குவலஞ்
சுழியி னெய்தி, நந்தனயன் காணாத சோதிதனை
வணங்கியங்கு நண்ணினரால். (௮௭)

கலிநிலைத்துறை.

வண்ண நீடுமெப் பதியிடை வதிந்திடு காலை, பெ
ண்ணு மாணுமாய்ப் பெண்ணையில் வினையும் பிற
ங்க, நண்ணு மாடவன் காத்தினிற் கதையுமாய்
நாணு, மண்ண லுற்றிடு மோனையிற் றினகர
னடைந்தான். (௮௮)

நோற்றவ் வேனிலிற் பொன்னிசூழ்ந் திடுவல
ஞ் சுழியினின்,றுற்று வேணியா ரானைமேற் றனி
யினி லணைந்து. போற்றி நீடிருச் சத்திமுத் தத்தி
னிற் புகுந்தாங், கேற்று வென்கொடிப் பரமனைப்
பாவினு றிறைஞ்சி. (௮௧)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

முத்தனை யுமையாள் பணிசிவக் கொழுந்தை மு
தல்வனைப் பூம்பொழிற் சத்தி, முத்தநித் தனைநே
ரிறைஞ்சியங் ககன்று முந்துபட் டீச்சரத் துறுங்
கான், முத்தமிழ் விரகர் முடிமிசை வேனில் முதிர்
வெயில் வெம்மைதீர்ப் பதற்கு, முத்தணி திகழும்
பந்தர்வந் தெடுத்து மொழிந்திடு முயர்சிவ பூதம்.

இந்தவெண் டாளப் பந்தர்மற் றுமக்கிங் கிலங்
குபட் டீச்சரத் தலைவர், தந்தன ரெனநின் றுரைத்
ததவ் வொலியுந் தண்ணிழல் விரித்திடுந் தாளப்,
பந்தரும் விசும்பி னெழுந்திட வுணர்ந்து பைம்
பொழிற் புகலிகா வலனு, ரந்தமென் பிறைசூ டா
னருள் கருதி யகமகிழ்ந் திறைஞ்சின ரெழுந்தார்.

ஓதிடு மனைய வேலையப் பந்த ரொளிமணிக் காம்
பினை யருகு, போதுறு முரிய பரிசனத் தவர்கள்
பொருக்கென செங்கைபற் றினர்கள்,மீதுறு மிமை
யோர் மலர்மழை பொழிந்து வியந்தனர் மறைகளு
மார்த்த, தூதுறு மிதழி புனைபரன் கோயில் சார்ந்
தனர் ஞானசம் பந்தர். (௯௨)

சென்றுநல் வலஞ்செய் திறைஞ்சிமுன் னெழுந்து சென்னிமேன் மலர்க்கரங் குவித்து, நின்று செந் தமிழாற் றுதித்துள மகிழ்ந்து நிலவுமப் பதிதனை யகன்று, வென்றிவெள் விடையோன் வளர் பதி பிறவும் மேவிவண் டமிழ்கொடு போற்றி, நன்றுமா தவர்கள் குழாத்தொடு மணைந்தார் சுரர் பயி லாவடு துறையுள். (௯௫)

கலிவிருத்தம்.

ஆவடு துறைவள ரமல மூர்த்தியை
பாவுறு செந்தமிழ் பணிந்து போற்றியுண்
மேவிய மகிழ்வுடன் மீண்டு வைகினார்
தாவிலப் பதியுறை தவத்தர் போற்றவே ()

மன்னுமப் பதியிடை வாழு நாட்களி
னன்னர்செய் திடுமக நவிலந் தாதையார்
பொன்னது பெறவெதிர் புகன்று நின்றன
ரின்னதோர் தவர்க்ககங் களிக்க வெண்ணியே.

கொச்சகக்கலிப்பா.

கோயிலினிற் புகுந்துமலர்க் கொன்றையணி சடையோனைத், தூயசெழுந் தமிழகனுற் றுதித்தனர்மற் றவர்க்கெதிரே, மேயமணி பீடத்து மீதொரு* பா டம்பசும்பொ, னுயிரமெய் தியகிழியொன் றானருளால் வைத்தோதும். ௭ (௯௬)

---

* பாடமென்பது பொன்மாற்றுயர்வினை.

இன்னதுபொன் னுலவாத கிழியாகு மிதுவுமக் குப், பன்னருநீ டணியிழையோன் பரிந்தளித்த தெனவுரைத்த, தன்னதுணர்ந் தெழிற்புகலி யண்ணலார் சிவனருளை, முன்னியெதிர் பணிந்தெழுந் து முன்னுறுமக் கிழியெடுத்தார். (கஎ)

எடுத்தருளித் தாதையா ரினியமலர்ச் செங்கை யினிற், கொடுத்தவரை மகம்புரிவான் கொச்சை நகர் தனைச்சார, விடுத்தனைய பதியகன்று விமலை னுறை பிறபதியு, மடுத்ததமி முடன்வணங்கி யணிமருக லினையணைந்தார். (கஅ)

மருகநகரினிலணைந்து மன்னியபொற்கோயிலிற் சென்; றுருகுமனக் காதலுட னுமைபாக னடிவண ங்கிப், பெருகுமிசைத் திருப்பதிகம் போற்றிசைத் தப் பெரும்பதியி, னருகினுறு தொண்டரொடு மகமகிழ்வி னுடுமிருந்தார். (கக)

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

அங்கினிதி லிருந்திடுங்கால் வைப்பூ ரென்னு மணிநகரி னொருவணிக னவனுக் காங்கு, பொங்கு மெழிற் புதல்வியரோ ரெழுவ ருண்டு போற்றவரு ளவனுடனே பிறந்தான் மைந்தர்க், கிங்கிவளைத் தருகின்றே னினைய மாதை யினிதினளித் திடுகின் றே னென்னக் கூறித், தங்கவரு ளறுவரையோவ் வொருவ ராகச் சாருமய லவர்க்கீய்ந்து தனங்கள் பெற்றான். (ஙா)

அன்னதனை லெம்மருகன் கவலை நீடவஃதுணர்ந்த வறுவருக்கும் பின்னர்த் தோன்று, மின்னிடை வெண் டாளநகைப் பவளச் செவ்வாய் விற்புரு வப் பொற்றொடிக்கை வேற்ற டங்கண், கன்னி மிக விரங்கியவன் றன்னைச் சார்ந்தாள் கருதியவ னவனொடுநீ ளிடையிற் செல்லத், துன்னு மந்த நகர்நீங்கி மருகனெய்தித் துலங்குமொரு மடத்தி னிடை மேவி னானல். (௱க)

மேவியந்த மடத்திரவு துயிலுங் காலை வெள் ளெயிற்று வாளரவொன் றணைந்து தீண்டத், தாவி விடங் கடிதேறி யுணர்வு சோர்வான் றன்னையுணர்ந் திளம்பிடியா ளரற்றல் கேட்டுத், தீவிடந்தீர்த் திடற்குறியா ரணைந்து தாங்கள் செய்வகையா லுந்தீரா திறந்தா னாகக், காவிவிழித் திருவனையா ளின்மையென் செய்வாள் காசினிமேல் விழுந்தெழுந்து புலம்ப லுற்றாள். (௱உ)

வஞ்சனைசெய் தவன்மகளென் றென்னை நீற்று வாளுகை மாதரின்ப முறச்சென் றுயோ, நஞ்ச முற வெனையுமுடன் கொண்டு சென்றுற் சார்ந் தேவ லெனுமுமக்கங் காற்றி டேனோ, மஞ்சுதிகழ் கண்மணியே வணிக ரேறே மதித்தெனைநீ தனி விடுத்த வாறென் னேயுன், னெஞ்சறியக் குறை யதுநான் செய்த துண்டோ நின்பவள வாய்திறந்தா புகல்வா யைய. (௱௩)

கறையரவந் திண்டகீ யடுவை யன்றோ கஞ்சம லர்ப் பொகுட்டினிடை யினிது மேவு, மிறைவ னுன்றன் சென்னிகனிற் பொறித்து வைத்தா னெனக்குறியா யினியானு முய்யே னென்னேன், றுறைதுளிகள் விழிசொரியக் கூந்தல் சோர வுருகினு ளிருள்புலருங் காலை தன்னின், மறைமுதலின் திருக்கோயில் வாயி ளேக்கி மலர்க்கைகுவித் தேத்தினுள் போற்றி யென்றே. (௮௪)

அந்தவொலி புகலியர்கோன் செவியிற் சாரவவ ரினிய மாதவர்சூழ்ந் திடவன் னுள்பால், வந்தஞ்ச லுனதல்லல் புகல்வா யென்ன மலர்க்கைகுவித் தவளங்கு வந்த வாறுஞ், சந்தமுறு மப்பதியி லுற்றவாறுஞ் சாற்றினளவ் விடந்தீரக் கருணை வைத்துக், கந்தமலர்ப் பொழில்சூழுங் காழி நாடர் கவின்மருக விறையோனைப் பாடி னுரால். (௮௫)

பாடுதலு மவன்விடந்தீர்ந் தெழுந்தா னங்கப் பாவைமகிழ்ந் தவர்தாளில் வீழ்ந்தா ளந்த, வேடுறு பூங் கோதையினு டன்னை யன்ன வெழில்வணிக ருடன்கூடி வாழு மாறு, நீடுமகிழ் வுறுமன்றல் வகுந்து விட்டு நிலவுபுகழ் கவுணியர்கோன் பின்னுஞ் சின்னுள், பீடுமலி மருகனுறை பெருமான் றன்னைப் பெருகியகா தலிற்பணிந்தி ருந்தா ரன்றே. (௮௬)

அப்பதியின் நின்றநம்பி னங்குப் பாங்கி ன ரன்மகிழும் பதிகள்பல வணங்கிப் போற்றிச்,

செப்பருஞ்சீர் திருவீழி மிழலை சேர்ந்து தேவர்
பிரா னடிபணிந்து துதிசெய் தாங்க, ணெப்பில்
புகழ் தொண்டரடி னுறைத னுற்று ருபர் தவத்து
வாகீசர் தாமு மங்க, ணிப்படிவந் தாங்கிறையோ
னடிகள் போற்றி யெண்ணில்பெருந் தொண்ட
ருட னிருந்தா ரன்றே. (௱௭)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

இவர்களிரு வருமகிழ்ச்சி யொடுவீழி மிழலைதனி
லிருந்து நாளி, லவனிமிசை மழைபொழித லொழி
ந்துபெரும் பசியணைந்த வதனா லோங்கு, கவலை
யொடு மன்னுயிர்க ளுணர்வின்றி யுடன்மெலியுங்
காலங் கண்டு, சிவனடியார் தமக்குமின்ன லுறு
மோவென் றிருவர்களுஞ் சிந்தை யுற்றார். (௱௮)

அத்தினநீ டிரவினுறு கனவிலெழின் மிழலையா
னணைந்து மக்கு, நித்தநமக் கெதிராக விருக்குமணி
பீடத்து நிகழ்கீழ் பாலுஞ், சுத்தமுறு குடபாலு
மோவ்வொருகா சளித்தனம்பாந் தோன்றி மன்று,
மித்தனைய சிறுவிலையின் காலந்தீ ரளவுமென
விசைத்திட் டானால். (௱௯)

கனவுதனிந் திருவர்களுங் கோயிலிற்சென் றிலை
ங்கியபொற் காசு கண்டு, மனமகிழ்ச்சி யுடனங்கை
கொண்டுபரன் றனைத்தொழுது மடத்தி னெய்தி,
பனையபெருங் காசுதவி வேண்டிவகொண் டானடி

யா ரணைந்தோர்க் கெல்லா, மினியதிரு வமுதாறு
சுவைத்திறத்தி னமுதூட்டி யின்பமாந்தார்.    ()

உம்பர்பிரா னடியவர்க்கிவ் வாறமுத நாளுமகி
ழ்ந் துதவுங் காலைத், தம்புவியின் மழைபொழிய
வுயிரனைத்தும் பெருமகிழ்ச்சி யணைதல் கண்டு, நம்
பனடி யவரொடுமப் பதிநீங்கிப் பிறபதியும் நண்
ணிப் போற்றிச், செம்பவளந் திரைபுரட்டுங் கடற்
கரையின் மறைக்காடு சேர்ந்தா ரன்றே.    (௩௰௧)

ஒங்குமணி பொற்கோயில் சென்றுவலஞ் செய்
தருளி யுயர்ந்த வேதம், பாங்குபெற வருச்சித்துக்
காப்பமைந்த திருவாயிற் பாங்கி னுற்று, ராங்க
தனைத் திறந்திடுதற் கருமையின்வே றொருவாயி
லமைத்துள் புக்குந், தாங்குமகிழ் வுடனடியார்
தொழுந்தன்மை யங்கணைந்தோர் சாற்றினார்கள்.

அன்னதுணர்ந் தருள்ஞான சம்பந்தர் திருநா
வுக் கரசை நோக்கி, மன்னுமிந்த வாயிலினு ளுட்
புகுந்து நித்தனையாம் வணங்க வேண்டுந், தூன்று
திருக் கதவுதிறந் திடப்பாடி யருள்கவெனச் சொ
ன்னார் நீடு, தென்னுறுசெந் தமிழ்நாவ ரவிசைத்
தார் மணிக்கதவந் திறந்த தன்றே.    (௩௰௩)

திறந்திடலு மியாவர்களு மனமகிழ விருவர்க
ளுஞ் சென்றுள் ளெய்தி, நிறந்தருஞ்செஞ் சடை
யவனைக் கண்டுபணிந் தானந்தத் தினிது மூழ்கிச்,
சிறந்தவிசைத் திருப்பதிகங் கொடுபோற்றி யருள்

பெற்றச் செங்கை கூப்பிப், புறந்தனில்வந் தணைந் தனர்வெண் பொடிதிகழு முடலின்னெழு புளகம் போர்ப்ப. (௱௰௪)

அங்கணைந்து திருநாவுக் கரசரொங்கள் காழிய ன்னவரை நோக்கித், தாங்கமணிக் கதவடைத் துத் திறந்திடவு மருள்கவெனத் துலங்கு காழிச், சிங்கமின வேறனையார் மகிழ்ந்துடனவ் வாதிசைக் கத் தின்மை நீடு, தங்குமெழிற் கதவடைத்தா ரவர்மாரி பொழிந்தனர்விண் டலத்தி னோர்கள்.

அன்றிருவர் களுமொருவர்க் கொருவரெதிர் மிக வணங்கித் தொண்ட ரார்ப்ப, வென்றிமறைக் குல முழங்கப் புவிபுகழ மடங்களிடை மேவி னார்க, ளன்றுமுத லவ்வழியே பானடியா ரெவர்களுமுள் ளணைந்து கொன்றை, மன்றன்மலர் வேணியனைப் பணிகின்று திருவனையும் வாழ்த்தி வாழ்த்தி ()

இருவருமங் கிருக்குங்காற்* கைதவர்நாட்டுறுப திகளெங்குஞ் சார்ந்து, கருகிமுட லமணர்குழா மிருந்தெவர்தம் மதியினையுங் கலக்கலாலே, மருவு புகழ்த் தென்னவனு மதிமயங்கி யந்நெறியின் மன்னி நின்றான், திருவனைய வன்மனைவி யாரு மமைச் சருஞ்சைவத் திறத்தி னின்றார். (௱௰௭)

*கைதவர் நாடென்பது பாண்டிநாட்டினை.

இதுவுமது வேறு.

மன்னவன் றேவி யாரா மங்கையர்க் கரசி யாருங், கொன்னவி னெடிய கூர்வேற் குலச்சிறை யமைச்ச ருருங், கன்னிநாட் டமண னென்னுங் கழுதுகார் மிகுத னேக்கி, யின்னர்கொண்மனத்த ராகி யிருந்தன ரிருக்குங் காலை. (௨௰அ)

வலனுறு புகலி மன்னர் மறைவனத் தினிது வைகு, நலனுறு செய்தி கேட்டு நனிமன மகிழ்ச்சி யெய்திப், பலனுறு காழி நாடர் பொற்பதம் பணிமி னென்று, சிலர்தமை விடுத்தா ரன்னார் திருமறைக் காட்டில் வந்தார். (௨௰௯)

வந்தவர் மடத்து ளெய்தி வளரொழிற் சண்பை வேந்தர், சந்தமென் மலர்த்தாள் போற்றித் தாங்கள்வந் தமைநின் றோதச், சிந்தையின் மகிழ்ச்சி கூர்ந்து செழும்பொழிற் காழி நாட, ரிந்தணி யெயில்சூழ் கூட லெய்திடக் குறித்திட் டாரால். ()

பெருமறை யருச்சித் தேத்தும் பிறைச்சடை யவனைப் போற்றி, யொருமையுற் றிடுநா வேந்தர்க் குவந்துதஞ் செலவுங் கூறி, யருமையி னவனை யங்கே நிறுத்திமற் றவ்வூர் நீங்கி, வருமலை யுரித்தோன் வாழு பதிபல வணங்கிச் சென்றார். ()

அளவில்சீர் மதுரை மூதூ ரருகுவந் தணையும் போது, வலர்குலச் சிறையா ராங்கு வந்தெதிர்

கொண்டு வாழ்த்த, வுளமகிழ்ந் தூரி னெய்தி யொ
ளிமணிக் கோயில் சார்ந்து, களமணி மிடற்றி னு
னைக் கண்டெதிர் பணிந்தார் மன்னோ. (௱உஉ)

போற்றிசைப் பதிகம் பாடிப் புறத்துவந் தணை
யும் போது, மாற்றலர்க் கடந்த வெள்வாள் மன்
னவன் றேவி யாருங், கூற்றினை யுதைத்தோன்
றன்னைக் கும்பிட வேண்டு மென்ன, வாற்றல்சா
லரசர்க் கோதி யாலயத் தெய்தி நின்றார். (௱உ௩)

அங்குசின் றெழில்சேர் காழி யண்ணலை மகி
ழ்வி னோக்கிச், செங்கரங் குவித்தார் நீடு தென்
னவ னமைச்ச னார்தாம், பங்கயத் தேன்கள் பாயும்
பழனஞ்சூழ் புகலி வேந்தர்க், கிங்கிவை வளவர்
பாவை யாரென விசைத்தார் தாழ்ந்து. (௱உ௪)

அதுவுணர்ந் தெதிரே காழி யண்ணலா ரெய்த
வந்த, மதுமலர்க் கோதை மின்னார் மற்றவர் தா
ளில் வீழ்ந்தார், கதுமெனக் காழி நாடர் கையினா
லெடுத்தன் னாருக், கினவருண் மொழிகள் கூறி
யெழின்மனைக் கேகு மென்றார். (௱உ௫)

அங்கவர் சென்ற பின்ன ரணிதரு மறுகி னெய்
திக், கொங்குலாந் துணர்தார் சூடுங் குலச்சிறை
யமைச்ச ராண்டோர், பொங்கெழின் மடமுன் காட்
டப் புகுந்தினி திருந்தார் போற்றுஞ், துங்கமா
தவர்கள் சூழுந் தோணிமா புரத்து மன்னர். ()

அதற்குமுன் னங்கு வாழு மமணர்தம் மழிவுக்
கேற்ப, விதிர்ப்புறு கனவு கண்டு மெலிவுட னிரு
ந்தார் முத்தின், கதிர்த்தனிச் சிவிகை மீது காழி
காவல னூர்ந்தப், பதிக்கண்வந் தடைதல் கண்
டார் பதைத்தனர் பொறார்க ளாகி. (௱௨௭)

அவ்வகை யமண ரெண்ணா யிரவரு மொருங்கு
கூடித், தெவ்வரைச் செகுத்த செவ்வேற் செழி
யன்முன் னெய்திக் காழிச், சைவவே தியனொருத்
தன் தருமன்பர் குழாத்தோ டின்னா, ளிவ்வளம்
பதியின் வந்தா னெங்கண்மேல் வாதுக் கென்றார்.

மன்னவ னதனைக் கேளா மற்றவன் றன்னை நா
மிங், கென்னசெய் திடலா மென்றா னிருட்குழு
வனையா ரன்னான், றுன்னிய மடத்திற் செந்திச்
சூழமந் திரம்வி ளைத்தா, லிந்நக ரகல்வா னென்
றா ரிறைவனு மியற்று மென்றான். (௱௨௯)

மாசுட லமணர் தங்கள் மந்திர வலியாற் செந்
தீத், தேசுறு தீதனை யேவச் சென்றில னவன்றா
னஞ்சிப், பாசிகொ ளெயிற்றார் பின்னர் பகர்தழல்
கொடுபோய்க்கையா, லீசர்தம் மகனார் வாழு மிடத்
தினி லிட்டார் கங்குல். (௱௩௰)

குண்டர்க ளிட்ட தீயின் கொடும்புகை மடத்தி
னோங்கல், கண்டது சிதைந்தாங் கன்பர் கவுணிய
ர்க் குணர்த்தி ஞான, முண்டவ ரனைய தீயை யுறி

யினி விருப்போ ரிட்ட, தெண்டிசை புகழுந் தெ
ன்னனேவலென் றறிந்து பின்னர். (௱௩௧)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

வழுவிலா நெறிசேர் சைவமா தவர்கள் வாழ்ம
டச் சுற்றினி லணைந்து, பழுதுடை மன்ன ரிட்ட
செந் தழல்போய்ப் பாண்டியற் பற்றுக வென்றுச்,
செழுமதிற் கூடற் சோதியை யினிய திருப்பதி
கங்கொடு துதித்தார், தழுவிய அடனே வழுதி
யை யணைய தழல்பெரு வெப்புநோ யாகி. (௱௩௨)

வருந்தமுற் றுடலஞ் சோர்ந்துழை தளர்ந்த
வழுதியி னிலைமைகண் டஞ்சித், திருந்தகு வள
வன் பாவையுந் தனிமந் திரப்பெருங் களிறனார்
தாமும், மருந்துறா லவரை யமணரை விடுத்து மற்
றவர் மருந்துமந் திரத்தா, லருந்தெழு வெப்பின்
வலியுறந் தின்ன லாற்றுமீ னவன் றனை நோக்கி.

மன்னவித் துயரம் புகலியின் வந்த மறையவர்
தமையன்றித் திரா, தென்னவெண் ணீறு கொ
ண்டவர் தீர்த்தற் கிசைவரோ வென்றவன் மொ
ழிந்தான், றன்றுமித் துயர மெந்திறத் தாலுந்
தொலைந்திட வேண்டுமிங் கதனிற், பன்னிடு முது
தி கூடுமோ வென்னப் பகர்ந்தன ரிருவரு மிரங்கி.

ஆயினிங் கழைமி னென்றவ னிசைத்தா னமைச
்சனுர் திருமடத் தெய்திக், காயிருஞ் சோலைக் கா

ழிகா வலனைக் கண்டுவிழ்ந் திறைஞ்சிநேற் றிர
விற், றீயரிம் மடத்தி லிட்டதீ சென்று தென்ன
னைப் பற்றிய ததனைத், தூயமா தவத்தின் றிருவுரு
வனையீர் தொலைத்திட வேண்டுமென் றிரந்தார்.

அன்னவற்காறி யற்றுதா மினிநீ ரஞ்சலி ரென்
றருள் புரிந்து, நன்னிறத் தரளச் சிவிகைமேற்
கொண்டு ஞானசம் பந்தர்சென் றெய்தி, மன்னவ
னருகேயிட்டபொற் றவிசின் வதிந்தனர் மன்னவ
னோக்கித், துன்னுமிப் பிணிதீர்த் தெளியனேன்
றன்னைத் தொண்டுகொண் டிடுமென வுரைத்தான்.

நின்றுனும் புலையர் கேட்டது பொருது நீதி
சேர் மன்னவ னிடப்பா, லொன்றிய நாமும் வலப்
புற மிவரு முற்றுநோய் தீர்த்திடப் பணித்தி, யெ
ன்றனர் வேந்த னத்திறம் புரிமி னெனப்புகன்
றூன்புகன் றிடுமுன், புன்றலை யமண ரருகனே
யின்று புரந்திட வேண்டுமென் றுரைத்து. ()

மீனவ னிடப்பாற் பீலியாற் றடவி மேவுகைச்
சிரகநீர் தெளித்தா, ரானவை தழலி னெய்சொரிந்
தனபோ லாயிடத் தென்னவன் பொருது, தேனி
மிர் பொழில்சூழ் புகலிமா நகரச் செல்வனை நோக்
கின னனைய ஞானமா தவர்வெண் ணீற்றினை யி
லகு நறுமலர்க் கையினி லெடுத்தார். (௱௩௮)

எடுத்தது மமணர் மாயநீ றிதுவென் றிசைத்
தனர் புகலியர் பெருமான், கடுத்திரு மிடற்றோன்

மடப்பளி நீறு காவல னேவலர் கொணர்ந்து, கொடுத்திட வாங்கி மருந்துமந் திரமுங் குலவெழி லாலவா யிடத்தி, னடுத்திடு மிறையோன் றனித்திரு நீறே யாமெனப் பதிகமங் கறைந்து. ()

கன்னிநாட் டரசன் வலப்புறத் திட்டுக் கையி றடவின ராண்டு, மன்னுவெஞ் சுரந்தீர்ந் தோடிய திடப்பான் மருவுநோ யாற்றல னுகித், தென்னவன் காழி வள்ளலை நோக்கித் திருவுளக் கருணையா னீரே, துன்னுமிப் புறத்துக்கொடுஞ்சுரத் தினையுந் தொலைத்தெனைக் காத்திடு மென்றான். (௱சய)

ஞானசம் பந்த ரிடப்புறந் தனிநு நளினமென் கையினுன் முன்போற், றூனமா வுரித்தோ னீறு கொண் டொருக்காற் றடவினர் தடவுமுன் னனையக், கூனுடன் வெப்புந் தீர்ந்தவ னெழுந்து கொச்சையார் தலைவரைத் தொழுதான், மானமிக் குடைய காரமண் குண்டர் மனத்திடை யச்சமுற் றிருந்தார். (௱சக)

மந்திரத் தலைவ ருடனெடு மாறன் மனைவியார் தாமுமுன் மகிழ்ந்து, சுந்தரப் புகலிக் குரிசிலைப் பணிந்து சுரத்தொடு கூனையு மகற்றி, யெந்தமக் குரிய புரவலர்ப் புரந்தீ ரின்றுநீ டமணரை யினைய, சந்ததா டகத்தி லிராவணை தொலைத்தாற் சைவமோங் கிடுமென வுரைத்தார். (௱சஉ)

புகலியர் தலைவ ராலவா யுறையும் புண்ணிய னருள துசெயுமென், றகமதிற் குறித்தாங் கெழுந்துபொற் கோயி லணைந்தரன் றனைப்பணிந் தேத்தித், தகவரு ளதுபெற் றுளமகிழ்ந் தன்பர் தம்மொடு மடத்தினுற் றிருந்தார், பகலவன் மேலைக் கடலிடை மூழ்கிப் பகர்ந்திடுங் கீழ்க்கட லெழுந்தான். (௱௪௩)

இருளனை யார்க ளனைவருஞ் சென்றோ ரிடத்தினிற் கூடிநா மின்று, புரவலன் றனக்குப் புகன்றவன் முன்னர்ப் புகலியான் றன்னைவா தியற்றித், திரமுற வென்றிங் கணைகுவோ மென்னத் தேர்ந்தெழுந் தேகினர் செலுங்கா, லரவணிந் தவனைப் பணிந்துமீள் புகலி யண்ணலை வீதியிற் கண்டார்.

கண்டவர் மறிக்கக் கவுணியர் மீண்டுக் காவலன் பேரவை யணைந்து, மண்டெழிற் றவிசி னிருந்தன ரனைய வஞ்சருஞ் சூழவந் திருந்து, திண்டிறலரசன் சுரந்தைவெண் பொடியாற் றீர்த்தன மென்றுநீ மகிழ்ச்சி, கொண்டிட லெதுநீர் வண்டுசெல் வழிந்தான் குறியெழுந் தாயின வாகும். (௱௪௫)

இற்றைநா ளுங்கள் மந்திரந் தனையோ ரேட்டினி லெழுதுக நாங்கள், பெற்றமங் கிரங்க டனையுமோ ரேட்டிற் பிறங்கிடத் திட்டுது மிரண்டுங், கொற்றமி னவன்ற னவைமுனங் கனல்வாய் கொ

டுத்திடில் வேவுறு திருத்தல், வெற்றியா யினவப்
பெருந்தழ லிடத்து வெந்தது தோற்றது வாகும்.

அதுவியற் றிடலு முங்கள்சார் பிறையோன்
மாதலத் தன்றிரு வருக்கும், பொதுநிலத் தணைது
மென் றெழுந்தனர் நகரப் புறத்தினிற் குணதி
சை யிடத்துக், கதுமெனச் சென்று கூடின ரொங்
கள் கவுணியன் றென்னவன் றனது, விதுமுக
னோக்கித் தியமைப் பதற்கு வினைஞரை விடுத்திடு
கென்றார். (௱௩௭)

தென்னவ னேவல் கொடுசில ராங்குச் சென்
றொரு கிடங்கமைத் ததனில், மன்னுமிந் தனத்
தை நிறைத்தெரி மூட்டி வைத்தனர் மாறனு மவ
ன்றன், மின்னிடை யாரு மமைச்சரும் பிறரும்
விளங்குமென் றுயிரத் திரட்டி, துன்னுமா தவ
ரும் சூழ்வரக் காழித் தோன்றலார் தாமும்வந்
தணைந்தார். (௱௩௮)

எண்சீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

அருகரொண் ணாயிரவ ரும்வெவ்வேறு தாங்க
ளறித்திடுமந்திரத்தை நவொவ்வோரோட்டிற் றீட்டிப்,
பெருகுதழ லிடையொருங்கு நீட்டி னார்கள் பிற
ங்கனைந்து மெரிந்தடலை யாயிற் றப்பான், மருவு
மெழிற் கவுணியர் தாஞ் சிவனைப் போற்றும் வளர்
பதிக முறையவிழ்த்தோர் கயிறு தன்னாற், குறும

லிவுற் றினமறித் தத்தமக்கு ஞானங் கொடுத்த
வடன் றிருநாம மடுத்த தாங்கு. (௧௪௬)

அத்தகைய திருப்பதிகந் திருநள் ளாற்ற தாம
ஊேய வேடுதன்னைப் பிரித்து நீடு, கொத்தழலி னி
டையிட்டா ரதுதா னங்கு, குளிர்புனலிற் கிடப்ப
தெனப் பசந்து தோன்ற, வெத்தகையி னேடுமதி
சயித்தார் காழி யெந்தலா ரதனையெடுத் தவைமுன்
காட்டிப், புத்தகத்தின் முன்போற் சேர்த்திட்டார்
முக்கட் புனிதனே தெய்வமென வெவருந் தேற.

பின்னுமந்த வமணர்களவ் வெவருங் காழிப் பிள்
ளையார் முகம்நோக்கி மாயைசெய்து, வன்னியை
யுன் மந்திரத்தாற் பிணித்து வைத்தாய் மற்றதனு
லுன்னேடு வேவாதுற்ற, துன்னுடைமந் திரவேடு
மெங்க ளேடு மோங்குபுனல் வையையினி லிடு
வோ மங்கு முன்னெதிர்சென் றிடுமேடு வெற்றி
யேடு முன்னீர்சென் றிடுமேடு தோற்ற தென்றார்.

அங்கதுவுஞ் செய்திடுவோம் வம்மி னென்று
வருட்புகலி யிறைபுகல வருகர் தம்மைத், தங்க
மதி யமைச்சனு நீவி ரங்குந், தோற்றிடிலென்
செய்வ தென்று ரனையார் தோற்கில், வெங்கழுவி
லேற்றிடுவே மென்றார் பின்னர் வேகவதி யிடத்
தெவரு மணைந்தார் முன்னுத், தங்கள்கையி னேடு
தனை யமண ரிட்டார் சாருமது வேலைதனிற் செ
ன்ற தன்றே. (௧௫௨)

மருமலர்ப்பூம் பொழிற்காழி யண்ணலார்தா மன்று யிருக்குயிராவான் சிவனே யாகி, லருமறைக ளனைத்து மவன் றனேயே போற்று மாகி லெதிர் செல்கவெனப் பதிகம் பாடி, வருபுனலிற் றிருக்கையினு லிட்டார் நீடு மற்றதுநீர் கழித்தெதிரே சென்ற தாங்கு, பெருமைபெரு வழுதி வியப் பெய்தி, நின்றான் பிரமலர் மழைபொழிந்தா ரிமையோர் வாழ்த்தி. (௱௩௩)

வேத்தனமைச் சனைப்பார்த்திவ் வருகர் தம்மை வெங்கழுவி லிடுகவெனப் புகன்ற னன்று, ராய்ந்ததன்முன் கழுகுகோல்கள் செய்வித் தாரவ் வருகர்தமைக் கவுணியர்பாத் தருளா நீரோன், மாய்ந்திடுகின் றீர்வெண்ணீ றணிந்து நம்பன் மலரடிக்காட் பட்டுய்மி னெனக்கே ளாராய்ங், காய்ந்தமனத் தவரெண்ணு யிரருஞ் சென்று கழுக்கண் மிசை யேறினர்கள் காக்கை கொத்த. (௱௩௪)

அரசனுபர் கவுணியனை நோக்கி யிந்த வாற்றெதிரே கியவேடெங் கேகிற் றென்றான், றனாசெய் தவக் கவுணியர்காட் டுதுமென் றுற்றின் றடங்கனாமேற் காவதஞ்சென் றங்கு நீடு, வினைசெறிகூ விளவனத்திற் சுயம்புவாகி விமலிருந் திடல்கண்டு பணிந்து போற்ற, வனாசிலையா கிடச்செய் தார் விருத்த மேனி மறையவரா யிலிங்கத்து ணின்று வந்தார். (௱௩௫)

வந்தவனை யுடனவனை வருக வென்று வளர் நெற்றி மிசைநீறு சாத்தி நின்றார், சிந்தைமகிழ்ந் தவ ரவனா யீசனென்னத் தெரிந்துபணிந் தியா ன்புனலி னிட்ட வேட்டை, முந்திவனத் தெடுத் திட்டீர் தருக வென்றார் முதல்வரோமை நீயின் னம் பன்னாள் மண்மேற், சந்தவிசைத் தமிழ்ப் பாடிப் பின்னர்வீடு தனைப்பெருகென் றேடளித்து மறைந்தா ரன்றே. (௱௫௬)

அங்கணர்பா லன்னதனை வாங்கி நிற்கு மக்கண த்தி லரசனுமங் கணைந்தா னன்னோர், சங்கரனு ரொ டுத்துநாம் வேண்டப் பின்னர் தந்தனரொன் றேடு தனைக் காட்டத் தென்னன், பொங்குகளிப் புடன் போற்றி யேடகத்துப் புனிதனையும் வணங்கி நின் றான் புகலிவந்த, வெங்கள்பிரா னவன்றனொடு மதுரையெய்தி யிருந்தனர்பின் சிலநாளங் கெவ ரும் போற்ற. (௱௫௭)

நறைமருவு நிம்பநெடுந் தனித்தார் வேந்த னல னுதவு நீறணிந்தஞ் செழுத்தும் போற்றிக், கறை மருவு கந்தரத்தோ னாலயத்திற் கவின்மருவு திருப் பணிகள் பலவுஞ் செய்து, நிறைதருமன் போடு விழா வதுவுஞ் செய்து நிதிநிலன்கள் பலகொடுத் தான் தனது நாட்டி, லுறுமருகர் பள்ளியுட னமணர் பாழி, யுள்ளவையு மிடித்தெறிந்துப் புனி தஞ் செய்தான். (௱௫௮)

தென்னவரி றனித்துசைவ ஞான தாலத் தேய மெங்குச் சைவமய மான தாங்கு, மன்னுகவு ணிய ரிறையோன் பதிகள் மற்றும் வணங்குதற்குறினை த்தெழுந்து மன்னர் கோனும், நன்னுதலா ருட னமைச்ச ருரு நீடு நற்றவத்தோர் குழாங்களுஞ் சூழ்ந் திடச்சென் றேங்கு, பொன்னிதழிச் சடை யவனெல் வேலியாதி புனிதமிகு தலமனைத்தும் வணங்கி னரால். (௱௫௯)

உம்பர்குலம் பணியவுமை யுடனெம் விச னுகந் துறையும் பதிகள்பல போற்றி மீண்டு, நிம்பநறுந் தாருடையோ னதி யாங்கு நிற்பவர்கட் கருளி னொடு விடையு மீய்ந்து, பம்புபுனற் பொன்னிவள நாடு சேர்ந்த பனிமதியும் விடவரவுஞ் சடைமேல் வைத்த, நம்பருறை திருக்கொள்ளம் பூதூர் தென் பா னன்னிவளர் முள்ளிவாய்க் கரையி னுற்றார்.

ஒங்கினைய நதியின்வெள்ள மிகுதி யாலே யோ டக்கோ னிலையாத தன்மை கண்டு, பாங்கினிலோ டம்விடுவோர் நிறுத்திப் போகப் பார்புகழுங் கவு ணியர்தா மதனை நோக்கிக், கோங்கிளமென் முலை யுமையா ளிடத்தி னானைக் கொள்ளம்பூ தூரினிற் சென் றிறைஞ்சுங் காதல், தாங்குமனத் தொடு தொண்டர் தமையவ் வோடந் தனிலேற்றித் தாமு மதன் மிதி னின்று. (௱௬௧)

சோதிதனைப் பாடுதலு மனையவோடந் துலங்கு வட திசையணைந்த திழிந்தங் கேகிப், பாதிமதிச்

சடையானை மகிழ்ந்து போற்றிப் பன்னுமந்தப் பதியினின்று நள்ளாறெய்தி, வாதியற்றும் வேலையிடத் தழலின் வேவா மறைப்பதிக முடையானை வணங்கி மீண்டு, போதிமங்கை யிடத்தணையும் போதினங்கு புத்தநந்தி வந்தெதிர்த்தான் புத்தர் சூழ. (௬௬௨)

வந்துவிறற் சின்னமதை விலக்க லுற்றான் வளர்புகலிக் கவுணியனார் போற்று கின்ற, சந்தவிசைத் திருப்பதிகமெழுது*மன்பர் தாமுனிவுற்றிவன்றலையி லிடிவீழ் கென்று, சந்தவுரை யிடியதனா லவன்றன் சென்னி யற்றதுபின் புத்தரொலா மச்சமுற்று, மந்திரத்தின் வலியதனா லன்றி நூலின் மன்னுபொரு வாதஞ்செய் திடுமி னென்றார். (௬௬௩)

நன்றெனக் கவுணியர்த மேவலாலே நற்றவரோ ரிடத்திருந்து நூலிற் பேசத், துன்றனைய புத்தரெலாந் தோற்றுக் காழித் தோன்றலார் தமைத்தொழுது சைவ ரானார், வென்றிபெரு கவுணியர்தா மவ்வூர் நீங்கி விமலருறை நந்திடுபதிகள் பணிந்து போற்றிக், குன்றவில்சீர் புகலிநக ரடைந்து நீடு குன்றவில்லோ னடிபணிந்தங் குறைந்தார் சின்னாள். (௬௬௪)

---

*அன்பர்=சம்பந்த சரணாலயர், இவர் ஆளுடைய பிள்ளையாருடைய நல்லம்மான்.

மற்றதன்பின் வடதிசையி லிறையோன் மேவும் வளம்பதிகள் சென்றிறைஞ்சுங் காதல் கொண்டு, நற்றவர்க ளுடனேகித் தில்லைக் கோயினகரண்ணா மலைமுதலாம் பதிகள் போற்றிக், கற்றவர்கள் பணிந்தேத்துந் திருவோத் தூரிற் கண்ணுதலை யடிவணங்கி யிருக்குங் காலை, யுற்றசிவ னடியவரங் கொருவ ரெய்தி யொண்மலர்த்தாள் பணிந்தெழுந்து புகல லுற்றார். (௱௬௫)

அடியனேன் சில*பெண்ணை வளர்த்திட் டேனிங் கன்னவைக ளாணாகி நிற்றல் கண்டு, கொடியவமண் கையர்நீர் வளர்த்த பெண்ணைக் குலைகள்காய்த் திலங்குமா றுளவோ வென்று, நொடிசெய்தா ரருள்புரிவீ ரென்ன நின்று நுவன்றனராங் கவர்க்கருள்வா னிறையோன்றன்னைப், படிபுகழுங் கவுணியர்போற் றிசைத்தா ரந்தப் பனையனைத்துங் காய்த்தததி சயித்தா ரியாரும். (௱௬௬)

அந்தவளம் பதிநீங்கி புகலி வேந்த ரணிமதிள்சூழ் காஞ்சிமுதற் பதிகள் மேவி, யிந்தணிந்தோன் றனைவணங்கி மகிழ்ந்து பாடி யெழின்மயிலாப் புரியிடத்தி னிறைஞ்சிப் போற்ற, முந்துபுகழ் தொண்டரொடு மருங்கி னுற்றார் மொழியிதன்முன் வணிகர்குலத் தவ்வூர் தன்னின், வந்

---

*பெண்ணை யென்பது பனையை. என்னை? தாலமே பெண்ணை புல்லுத்தாளி புள்பதிபனைப்பேர், என்க.

துதித்தார் சிவநேச ரென்று வாழ்வார் மற்றவர் நற் றவஞ் செய்தோர் பெண்ணை யீன்றார். ()

அன்னவட னழகினைப்பார்த் தவட்கு நாம மறைந்தனர்பூம் பாவையென வவட்கே பூாண்டு, மன்னிடுங்காற் சிவநேசர் புகலி வேத மன்னர்திற மனைத்துமுணர்ந் துவகை நீடி, யென்னுடைபூம் பாவையுநீ ணிதியுங் காழி யேந்தலார்க் கிந்தன னென் றுரைத்து வாழ்ந்தார், பன்னுமவள் சேடியர்சூழ்ந் திடச்சென் றோர்நாள் பைம்பொழிலிற் றளவமலர் கொய்தார் மன்னோ. (௱௬௮)

அலர்பறிக்கும் வேளையினி லரவ மொன்றங் கணைந்தவளைக் கடித்திடலு மிறந்தா ளாகப், பலர்புகழுஞ் சிவநேசர் வறிந்துப் பின்னர் பண்புபெறு கவுணியர்க்கென் றிவளை முன்னாள், வலமகிழ்வி னுரைத்ததனு லனையா ரிங்கு வருமளவு மிவளுடலைத் தழலி விட்டுக், குலவெலும்பி னுடுசாம்பலினையு மன்னு குடத்தெடுத்து வைப்பனென்றவ் வாறு செய்தார். (௱௬௯)

பின்னெனவரு மனமகிழ்வுற் றிருக்கு நாளிற் பெரும்புகலிக் கவுணியனுர் வருதல் கேட்டு, நன்னர்மிகுஞ் சிவநேச ரெதிரே சென்று நளினமலர்த் தாள்பணிந்தார் புகலி வாணர்க், கன்னவர்தஞ் செய்கைதனை யன்பர் கூற வதனைமன திற்கொண்டு புகலி வாணர்,மன்னுபுகழ் மயிலையிற்சென் றரனைப் போற்றிவான்றொடுகோபுரவாயற்புறத்துவந்தார்.

அங்குநின்று வணிகர் நீர் பயந்த பாவை யங்க
முறு குடத்தை யிங் கொணர்க வென்னப், பொங்
குமகிழ் வுடன்வாசற் சிவிகை மீது போற்றதனைக்
குணர்ந்தெடுத்து முன்னம் வைத்தார், கொங்கலர்
மொய் திருசோலைப் புகலியாரக் குடத்தினைக்கண்
டெழிற்கபா லீசரத்துத், தங்குபான் றனைத்தொ
ழுது பதிகம்பாடத் தக்ககுடமு டைந்தெழுந்து
நின்றா ளன்னாள். (௱௭௧)

எழுந்துமலர் மகளினழ குடையா ளாகி யீராறு
வயதினளாய் நிற்ற னோக்கிச், செழுபுவியி னவர்
களதி சயித்தார் விண்ணோர் சிதமலர் மழைபொ
ழிந்தா ரனையா ளிந்துக், கொழுந்தணியுஞ் சடை
யவனைப் பணிந்து காழிக், கொற்றவனைத் தொழு
தன்னனன் னவரா னந்தத், தழுந்திநிற்கும் வணிக
னைப்பார்த் தினியின் னாளையழைத்தினிது கொண்
டுமனைக் கேகு மென்றார். (௱௭௨)

வணிகர்கவு ணியனைப் பணிந்தின் னாளை ம
ணம்புரிந்திங் கருளுகென மதியி னோடு, பணிய
ணிவா னருளினா லிவளை யின்று பயந்ததனா லினை
யவுனாத காதென் றேங்கு, மணிமருவு புகலியினா
ருரைத்தார் பின்னர் வல்லவளை யயலோருக் குத
வே னென்னுந், துணிவினொடு மனையினிடைக்
கொடுபோய் வைத்தார் துலங்கவள்பின் னாளிரு
ந்து விடுபெற்றாள். (௱௭௩)

தென்புகலிக் காவலரவ் வூரிற் பின்னுஞ் சிவபெருமான் றனைப்பணிந்து சிலநாள் வைகி, யன்பினொடு பிறபதியும் பணிந்து போற்றி யன்பர்குழாம் புடைசூழக் காழி மேவி, மின்பிறைசெஞ் சடையவனைப் பணிந்து மீண்டு விளங்குமனை யிடத்தெய்தி யிருந்தா ராக, வின்பமுறு கிளைஞரொடு தாதையாரு மிவர்தம்பால் வந்தினிது விளம்புகின்றார். (௱௭௪)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

மன்னிய வேத விதிவழி யினினீர் மகம்பல செய்திடும் பொருட்டோர், கன்னியை வதுவை செய்திட வேண்டுங் கருணைசெய் கெனவுரைத் தனர்க, ளன்னவா றினிதி னிசைந்தன ரவர்க ளகமகிழ்ந் தெழிற்பெரு மணத்துப், பன்னுநம் பாண்டார் நம்பியார் பயந்த பாவையைக் கேட்பதற் கணைந்தார்.

அவர்கள்சார்ந் திடநல் லூர்ப்பெரும ணத்தி னருந்தவத் தந்தண ருணர்ந்தாங், குலவையின் விதியலங்கரித் துயர்ந்தோ ருடனெதிர்க் கொண்டழைத் தேகி, நவமணி மாடத் தெய்திநன் முகமனவின்றன ரவர்தமைக் காழித், தவமறை யவர்கள் மகிழ்வொடு நோக்கித் தாங்கள்வந் திடுதிறம் புகன்றார். (௱௭௫)

ஆங்கதற் கனையார் தோணிமே லிறையோ னருள்பெரு தோன்றலார்க் கெங்கள், பூங்கொடி யினையிங் கினிதளித் தியாங்கள் புரிதவப் பயனடை

இன்றோம், பாங்குடன் வருக வென்றன ரவர்கள்
பைம்பொழிற் புகலியி னெய்தி, யோங்குமெய்ஞ்
ஞான முண்டவர்க் கவரங் குவந்திசை யுற்றதோ
தினரால். (௱௭௭)

இயம்பிய பின்னர் மன்றல்செய் வதனுக் கிசைந்
திடு நாளினை வகுத்து, நயம்பெரு வதுவை யோலை
முன் னனுப்பி நறுமுளைப் பாலிகை விதைத்து, வ
யங்கிடு புகலி வீதிக ளனைத்து மகரதோ ரணமணி
விளக்கு, வியன்பெரு கமுகு னிறைகுடங் கதலி
மேவுறக் கொண்டலங் கரித்தார். (௱௭௮)

பாங்குறு பதிவாழ் கிளைஞர்க ளொடுசீர் பற்றிடு
தொண்டர்தங் குழாமு மோங்கிடு மணநாள் கேட்
டுள மகிழ்வுற் றொருங்கெழிற் புகலியி னடைய,
வாங்கவர் தங்க ளுடன்சிவ ஞான மருந்தினர் தம
க்குநீள் பெருமை, தாங்கிய வேத விதிமுறை சமா
வர்த் தனச்சடங் கியற்றுவித் தார்கள். (௱௭௯)

மற்றதன் பின்னர் பயந்தவ ரெனையாள் வள்ள
லார் தமதுமுன் மருவி, யிற்றைநா ணல்லூர்க் கே
கிட வேண்டு மென்றனு மவரினி தேகிப், பெ
ற்றமூர்ந் தவனைத் தோணிமீ திருக்கும் பிரான்
றனைப் பணிந்தரு ளேற்றுப், பொற்றனிக் கோ
யிற் புறத்தணிந் திலங்குபுகழ்மணிச் சிவிகைமேற்
கொண்டார். (௱௮௰)

நிலவிய தொண்டர் கணங்களு மருகுநீடிய பரி
சனத் தவரும், குலவிய கிளைஞர் தொகுதியு மே

ருங்கக் குடையொடு தொங்கல்வெண் கவரி, யிலகிடப் பேரி காகளந் தாள மெழினுறு சின்ன மு முழங்க, நலனுற வேதக் குலமெழுந் தார்ப்ப நன்னுதன் மடந்தையர் வாழ்த்த. (ஈஅக)

சித்தார்கந் திருவர் விஞ்சைய ரியக்கர் தேவர்க ளரம்பையர் கணங்கள், மெத்தவு மகிழ்ந்து மணத் தெழில் காண விசும்பினிற் சென்றிடச் சென் ஹேுங், குத்தம நல்லூர்ப் பெருமணத் தருகி னுற் றன ரிதற்குமுன் னுக, வெய்த்தவர் மணநா ளோ லைகொண் டனைய வியன்பதிக் கெய்திய தினத்தின்.

மன்னுநம் பாண்டார் நம்பியார் மகிழ்ந்து மணம் புரி நாட்கெழு நாளாய், முன்னர்நற் றினத்து மணமுர சதிர முந்துறு கிளையுடன் கூடிப், பொன் னணி மணிப்பா லிகைமிசை யோங்கு புனிதவெ ண் முளைவிதைத் தெழிலி, துன்னிய மாட மாளி கை யனைத்துந் துலங்கெழி லோவியந் தீட்டி. ()

முன்றினி லிடையொண் பந்தர்நன் கியற்றி மு த்தணி விதானங்கள் வீக்கித், துன்றிய பாவை வி ளக்கொடு கதலி தோரணம் நிறைகுடங் கமுகு, மன்றலந் தொடைய லாதிக ளிவற்றுல் வனப்ப மைத் தென்னையா ளுடையோன், வென்றிவேற் றடங்கண் மாதுட னிருக்க வியன்மணித் தவிசு மொன் றமைத்து. (ஈஅச)

திகழுமந் நகரின் வீதிக ளனைத்து நீண்டவன்
காவணங் கமுகு, துகிலெழிற் கொடிகள் கதலி
யொன் மகர தோரணந் திபநீர்க் கும்பந், திகழு
றச் செய்து கிளைஞர்க ளெவர்க்குஞ் சிறப்பளித்
திருந்தன னெய்தும், புகலிகா வலனார் தம்மையங்
கணைந்து பொங்குகா தலினெதிர் கொண்டார். ()
கவுணிய ரெழிற்பூங் கோயிலி னெய்திக் கண்
ணுத லினைப்பணிந் தேகித், தவமறை யோர்நின்
றினிமணக் கோலந் தரித்திட வேண்டுமென் றிசை
க்க, நவமணிக் கோயிற் புறத்தொரு மடத்தி நண்
ணினர் கைவினை புரிவோர், கவின்மணிக் குடத்து
வாசநீ ராட்டிங் காமர்பட் டாடைமுன் னணிந்து.
இலங்குமுந் தரிகஞ் சாற்றிநற் சாந்த மியல்பு
றப் புனைந்துதண் சோதி, துலங்குநித் திலத்தாற்
கலன்பல வணிந்தார் தூயகண் டிகையொடு நீறு,
நலங்கிளர் காழித் தலைவர்தா மணிந்து நற்றனிச்
சிவிகைமேற் கொண்டு, குலங்கொடு முரச மார்த்
திடச் சென்று குலவெழின் மணமனைப் புகுந்தார்.
உயர்மணித் தவிசி னிருந்தன ரவர்த மொன்
மலர்ப் பதத்தை நமின் கொடியை, நயனுறக் கொடு
ப்போர் பாலுறு புனலா னலம்பெற விளக்கியப்
புனலை, வியனுறத் தங்கள் சென்னிமேற் கொண்டு
விளங்கவர் மலர்க்கரத் தன்னிற், புயன்மலர்க் கூந்
தற் புதல்வியார் தம்மைப் பொருந்துறத் தான
முஞ் செய்து. (௱௮௮)

அந்தமன் னனையார் தமக்கெழிற் கனக வணிம
ணிக் கலன்பல புனைந்து, சுந்தரத் தவிசிற் கொ
ணர்ந்தவ ரருகு துன்னிடை வைத்தனர் வந்த,
முந்துறு நீல நக்கர்மென் சுருதி முறைச்சடங் கிய
ற்றினர் நீடு, சந்தவெண் கனலை வலஞ்செயும் வே
லை சார்ந்தது கவுணியரெழுந்தார். (௩௮௯)

மடநடை மனையாள் மலர்க்கரம் பற்றி மற்றெ
ழுந் தவர்பரன் றளே, சுடர்வடி வெனவு மினைய
வில் வாழ்க்கை தொடர்ந்ததே யிங்கினி யின்று,
ளுடனுயர் பரன்று ளடைகுவோ மெனவு முளம
திற் குறித்துநீ டெவரும், சுடலெனச் சூழ்ந்து
வரவினி தேகிக் கண்ணுதற் கோயில்முன் னுற்று.

திருவுளப் பரிவி னுயர்சிவ லோகத் தியாகநா
யகன்றனை நல்லூர்ப், பெருமணத் துறையு நம்ப
நின் மலர்த்தாள் பெரும்பத மிதுவெனப் பாடக்,
கருணைசெய் திறையு நீயும்நீ மணஞ்செய் காரிகை
யவளுநின் மணத்தி, னுரிமையால் வந்தோ ரெவர்
களும் நம்பா லுற்றிடு மீங்கினி தென்று. (௩௯௧)

இலங்குபொற் கோயின் முழுவதும் நிறைந்
தாங் கிருவிசும் பளவுமீ தோங்கித், துலங்கிடுஞ்
சோதி யாகிவந் தெவருந் துன்னிட வாயிலு மெ
திரே, புலங்கொள வினிது காட்டிடத் தொழுது
புகலிய ரியாவருங் கேழ்க்க, வலங்கொளு ஞான
நெறியதாய் நமச்சி வாயநற் பதிகமங் கிசைத்து.

மன்னுறு பிறவி தீரவெல் லோரு மருவுமின் சோதியா மிதனு, ளென்னநின் றுரைத்தா ருயர் சிவ பாத விருதய சோதுங்கம் பாண்டார், துன்னு சீர் யாண ரிவர்துணை மாதர் தொண்டர்க ளந்த ணர் குழாங்கள், பன்னுநற் சிவிகை தாங்கினர் முதலாம் பரிசன ரியாவரும் புகுந்தார். (௱௬௩)

மருவிடுஞ் சோதி வடிவுட னனைய வளர்தருஞ் சோதியுட் புகுந்த, பெருகிய தவத்தோர் மீண்டிடா வகையும் பிறர்சில ரிருந்தனர் நோக்கி, வெரு வின ருகியிருந்தன ரிறையோன் மீட்டவர் தமைக் கொணர் கென்று, பொருவிரல் விடையை யேவி னதுவும் பொருக்கென வெழுந்ததை யன்றே.

ஓங்கிடும் வெள்ளி மலையென வெழுந்த வொரு தனிப் பெருந்திற விடப, மாங்கவர் படரும் வழி தொறு மோடி யன்னவர் தமக்கெதி ரணைந்து, பாங்குற வளைத்துப் பின்னுமோ டினனைப் பாய் வது போலவுமுனிந்து, தீங்கிழைத் திலதா யோங் குறக் கூட்டித் திரள்படக் கொணர்ந்தது மாதோ.

மற்றவ ரெவரு மருகுவந் திடனு மன்னெறிற் கவுணியர் தலைவர், நற்றவம் புரிந்தீர் நீவிருஞ் சோதி நண்ணுமி னென்றன ரவரிற், பொற்றொடிக் கணிகை பொருத்தியிங் கடியேன் பூத்திருக் கின் றன னெனவாங், குற்றதைப் பொருந்து நாணு டன் செம்மையொதுங்கின ளாகிநின் றுரைத்தாள்.

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

பொழில்புடைசூழ்ந் திடுபுகலிக் கவுணியர்தங் குலத்துதித்த புனித ரந்த, வெழின்மருவு காரிகைதன் முகநோக்கிப் பெருநெருப்புக் கிர மின்றுஞ், செழுமையுறு மைந்தெழுத்தி னுருவதுவா மிணையநெடுந் தீர்த்த மூழ்கித், தழல்வடிவாய் விளங்குபெருஞ் சோதியிடைப் புகுதுமெனச் சாற்றினால். (௱௬௭)

அன்னவடன் மனக்கலக்க நீக்கமுறக் கவுணியர்நீ டைந்தெழுத்து, மன்னுபெருந் தீர்த்தமதின் மூழ்கிடுகென் றலுமினிது மகிழ்ந்து மூழ்கி, மின்னிடைவேற் கருந்தடங்கண் பாவைதடங் கரைமீது மேவ லுற்றாள், பன்னுமய னின்றேரு மத்தீர்த்தம் படிந்தெழுந்து பாங்கி னின்றார். (௱௬௮)

கலிநிலைத்துறை.

அந்த வேலையி லவர்க்கெதி ரந்தணர் குலத்துச்
சுந்தரத் தனிக் கன்னிகை யென்மணிச் சுடர்செய்
சந்த நீடுபொற் பணியணி யிடந்தொறுந் தயங்க
வந்து நின்றன ளுலகெலா மீன்றருள் வனிதை.

நின்று மற்றவர் தங்களை நோக்கி வெண் ணீறு, துன்று நீவிரொண் ணுதன்மிசை யணிகெனத் தூய, தன்றிருக்கையாற் றனித்தனிக் கொடுத்தனள் சாரர், சென்று வாங்கியங் கவாவ ரணிந்தனர் திகழ. (௨௱)

அணித்த காலெபி னுயர்சிவ ஞானம தடைந்து, வணங்கி யோங்கெழிற் சோதியுள்ளு மருவின ரே னிக், கணங்கள் வானவர் போற்றத்தி-க் கருதுதன் கோயி, லணைந்து நின்றுங்குமந் நகரியர்க் கன்றுபா லளித்தாள். ·ல மகிமை (௨௱௧)

அறுசீர்க்கழி நெடிலடி வந்ரிய விருத்தம்.

இன்னவகை மணங்காட வந்தவருந் தவர்களு டனின்ப விடு, தன்னையுற நினைந்தனைய மாதல த்தி னிடையினிது சார்ந்து ளோரு, மன்னுறச் சென் றடைந்ததற்பி னெனையாளு மெழிற்காழி வள்ள லார்தா, மன்னிடைப்பூங் கோதையுடன் சென்றனைய சோதியினுண் மேவினரால். (௨௱௨)

கொச்சகக்கலிப்பா.

அன்னவர்புக் கொன்றியபி னந்தனிச்செஞ்சோ தியங்கு, மன்னுமெழிற் சிவலிங்க வடிவினுளவ் வழிகரப்ப, பொன்னிலங்கு கொன்றையினுர் பூங் கோயி லேன்றுதலும், பன்னுமுயர் விண்ணோர் கள் பனிமலர்மா மழைபொழிந்தார். (௨௱௩)

அத்தினந்தான் வைகாசி மூலமா மன்னதன்பி, னித்தகைமை தூரத்தே கண்டணைந்தங் கெய்த வுறுச், சித்தர்முனி வோர்கணங்கள் முதலானோர் தெருமந்து, மத்தவனை யுரித்தவனை வணங்கியெ திர் போற்றினரால். (௨௱௪)

எழுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

சில்லைபி [illegible] றவாய்ப் புரிசிவலோகத் தியா
கர்த மிட [illegible] மலமொழிற்கூந்த லுமை
யவ ளின [illegible] தெழுத்துறு தீர்த்தத்
திலகிடுங் [illegible] ன்றுசில் லோர்க ளியல்
சிவ ஞான [illegible] லவிடு வெண்ணீ றளித்த
லாற் [illegible] ம தடைட [illegible] மை யென்றுலகிசைக்கும்
ருவெண் ணீற

குன்றவில மைமதூதோ னருளின டியார் குல
மருண் டோடிடுங் காலை, வன்றிற விடபமே
மூந்துமற் றவர்செல் வழிதொறும் வழிதொறு
முடுகிச், சென்றுமுன் னின்றுங் கவர்தமைச் சிறி
துச் சினத்துடன் றாத்துநீ டெல்லை, துன்றுமூர்
தனக்கு மருவுபே ரிடபங் தாத்தியென் றின்ன
மும் வழங்கும். (௨௱௯௬)

அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

தருமவடி வாமனைய விடபமொரு வயிற்சிலர்க
டம்மைச் சூழ்ந்து, பரிவுறுநெஞ் சுடனவையோர்
வெருவுறத்துன் னிடுங்காலை, பதங்க ளொன்கு
மருவிடுதா ரணிகுழியுற் றிலகுபுன லூறி யொரு
வாவியான, துருவளான் னதையிடபத் தீர்த்தமென
மனைவையிடத் துலக மோதும், (௨௱௯௭)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

முருகவிழ் மலர்த்தண் பொழில்வளர் காழி முரு
கெழிற் கவுணிய ருபர்ந்து, திருமணம் புரிந்த தாற்

பெருமணத்திகழ் பெருமண முலகி யல்பின், மரு விய மொழியால் மணவைபா மினிது மருவிடு மள விலோர் கட்குப், பொருவிலா முத்தி-க் கித்தலான் முத்திப் புரமென விளங்குமந் நகரியர்க் (உ௱அ)

இலங்கிடு மிளைய மாதல மகிமை — னமுமள விலவாகும்; புலன்கொள வகைவக — மையுமுங் களுக்குப் புகலுவ னினி யெமன வினிது, அலங்கிடு மதியம் புனைபரஞ் சோதி துணையடி பதித் திரு க்குரலம்பெற சைவக் குமாரங் கிசைத்தார் நன் றுமா தவரொலா மகிழ்ந்தார். (உ௱கூ)

அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தம்.

வேதியர் வேதம் யாகம் விண்ணவர் பசுக்கள் வாழி, மாதமும் மாரி பெய்யும் வளனுறு முகில்கள் வாழி, காதல்செய் தருமம் வாழி கலைகளா கமங்கள் வாழி, பூதலத் தெவரும் வாழி புரவலன் செங் கோல் வாழி. (உ௱ய)

மன்னிய மணவை யென்னும் வளர்தரு சிவலோ கத்தின், பன்னுமான் மியத்தை நயன்பிற் படிப்பவர் கேட்போர் யாரு, மின்னில மதனிற் பன்னு ளின் பமுற் றிருந்து பின்னர், சென்னியில் மதியுஞ் சூடுஞ் சிவனடி நீழல் சேர்வார். (உயக)

திருமணநல்லூ ரென்னும்
ஆச்சாபுரத் தலபுராணம்.
முற்றிற்று.
ஆகத்திருவிருத்தம் - ௨௱௬௧.